உ

குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

லர் 25 ] பராபவ ஆண்டு ஆடித்திங்கள் 10—8—66 [ இதழ்



தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர்

### அருள்வாக்கு

ஆர்க்குந் தெரியாத
ஆனந்த இன்பவெள்ளம்
மேற்கொண்டு கொண்டு
விடுகுதில்லை—யார்க்கும்
தெரியாப் பரப்பிரமஞ்
சேர்த்தாய் உனக்குச்
சரியார் சிதம்பர நா
தா (43)


ஆசிரியர் :-

வித்துவான்,

சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

துணையாசிரியர் :-

வித்துவான்,

சி. அருணைவடிவேல் முதலியார்.



உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 || 10–8–66 || இதழ் 9


## உட்பொருள்





### அட்டைப்பட விளக்கம்

தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் திருக்கயிலாயத்தைக் கண்டுகளித்த ஆடி அமாவாசையன்று அதன் நினைவாகக் கொண்டாடப்பெறும் விழா இவ்வாண்டு 16—8—66 செவ்வாய்க்கிழமை அன்று நடைபெறும்.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 25 ]      பராபவ - ஆடி - 10—8—66      [ இதழ் 9

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிர் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே.      (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

## பிறைமுடிப் பெம்மான்

நல்லன, யாவராலும் விரும்பப்படும். தீயன, யாவராலும் வெறுக்கப்படும் அறிவு, ஆற்றல், உண்மை, நடுவுநிலைமை முதலிய நல்லன பலவற்றிலும் மிக மேலானது, அருள் அல்லது கருணை. நன்மையே வடிவான இறைவனே நல்லன பலவற்றிற்கும் இருப்பிடம். அதனால், அருளுக்கும் அவனே இருப்பிடம். ஆகவே, இறைவனை, 'உண்மையே வடிவினன், அறிவே வடிவினன், நடுவு நிலைமையாகிய அறமே வடிவினன்' என்றெல்லாம் சொல்வதினும், 'அருளே வடிவினன்' என்றே பெரும்பான்மையும் கூறுகின்றனர் பெரியோர். அதனால், அவன் கொள்கின்ற

உருவம், செய்கின்ற செயல் முதலிய பலவும் அருள்மயம் என்றே கூறப்படும்

" உருஅருள் குணங்க ளோடும்
உணர்வருள் உருவில் தோன்றும்
கருமமும் அருள் ; அரன்றன்
கரசர ணாதி சாங்கம்
தரும்அருள் ; உபாங்க மெல்லாந்
தானருள் ; தனக்கொன் றின்றி
அருளுரு உயிருக் கென்றே
ஆக்கினன் அசிந்த னன்றே "

என்கின்றது சிவஞானசித்தி. இதனால், இறைவன் செய்கின்ற ஐந்தொழில்களும் அருட்டொழிலே என்பதைக் காரணங்களுடன் விளக்குகின்றது அந்நூல்.

இவ்வாற்றால், இறைவன் கொள்ளுகின்ற ஒவ்வொரு வடிவமும் அவனது அருள்நிலையையே விளக்குவதாயினும், சிற்சில வடிவங்கள் அஃது ஒன்றையே சிறப்பாக விளங்குகின்றன. தென்முகக் கடவுள் வடிவம், அவன் ஞானத்தின் முதல்வனாதலைத் தெரிவிக்கின்றது. காலசங்கார வடிவம், காலத்தைக் கடந்துநின்று அதனை நடத்துபவனாதலைக் காட்டுகின்றது. நஞ்சுண்ட வடிவம் அழிவிலனாதலை விளக்கும். இவ்வகையில், பிறைசூடிய வடிவம், சார்ந்தாரைக் காக்கும் தண்ணளியினன் என்னும் தகைமையை விளக்குவதாகும்.

இறைவன் பிறைசூடிய வரலாற்றைக் கந்தபுராணம் பின்வருமாறு கூறுகின்றது :

படைப்புக் கடவுளாகிய பிரமதேவனது மானதப் புதல்வர்களில், ' தக்கன் ' (தட்சன்) என்பவன் ஒருவன். அவன் இயற்கையில் நற்குணம் உடையவனல்லன். ஆயினும் பிரமதேவன் தனது புத்திரவாஞ்சையால் அவனுக்கு ஞானத்தை உபதேசித்து, சிவபெருமானை நோக்கித் தவம் செய்யுமாறு பணித்தான். தக்கன் அங்ஙனமே செய்த தவத்திற்குச் சிவபெருமான் திருவுளம் மகிழ்ந்து வெளிப்

உ

குருபாதம்

திருத்தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய**

# அருளுரை

---

## *உய்யுமாறு*

அன்றுமுதல் இன்றளவும் மேலும் அடியேனுக்
கென்றுநீ நன்மைசெய்வ தன்றிநான் - ஒன்றேனும்
செய்யுமா றெங்ஙன்? சிவனே! இனிநாயேன்
உய்யுமா றெங்ஙன்? உரை.

—குருஞானசம்பந்தர்.

*ஒவ்வோர் உயிருக்கும் அது நன்கு வாழ்வதற்கு, வேறு பலவற்றின் உதவி இன்றியமையாதது. பறவையும் விலங்கு மாகிய உயிர்கள் பிறந்து வளர்வதற்குத் தாயினது உதவி இன்றியமையாததாகின்றது. மக்கள் உயிர்க்குத் தாயினது உதவியுடன், தந்தையினது உதவியும் வேண்டப்படுகிறது. ஊர்வன நீர்வாழ்வனவற்றிற்கும் இத்தகைய உதவிகள் ஓரளவி லேனும் வேண்டுவனவே. மரம், செடி, கொடிகள் ஏனைய உயிர் கள் வெளிவிடுகின்ற காற்றினாலேதான் நிலைத்திருக்கின்றன. ஏனைய உயிர்கள் உட்கொள்ளும் காற்று, மரவகைகளினாலே தரப்படுகின்றது. மரவகைகள், பல உயிர்களுக்குத் தங்குவதற்கு இடத்தையும், உண்பதற்குத் தழை, காய், கனி முதலியவற்றை யும் தந்து அவைகளைக் காப்பாற்றுவதை அறியாதவர் யார்! ஓரறிவுடைய மரவகைகள் இல்லையேல், ஆறறிவுடைய மக்கள் வாழ இயலுமா என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும். தாமாகத் தோன்றி வளர்ந்தும், மக்கள் செய்யும் உழவுத் தொழிலால் தோன்றி வளர்ந்தும் வாழ்கின்ற மரவகைகள், பயிர் முதலியவை தருகின்ற பயன்களே, மக்கள் வாழ்க்கையின் உயிர் நாடியாய் அமைந்திருத்தல் வெளிப்படை. மக்கள் வாழ்க்கை*

யின் உயிர்நாடியாய் உள்ள உழவுத் தொழிலுக்கும், பிறவற்றிற்கும் மாடுகள் எத்துணை உதவியாய் இருக்கின்றன! 'மாடு' என்பதற்கே செல்வம் என்பதுதான் பொருள். அதனால் மாடுகளே மக்களின் செல்வங்களாகின்றன.

இனி, மக்கள் இனத்தில் ஒருவர் செய்யும் தொழில் மற்றவருக்கு இன்றியமையாததாக, எல்லாத் தொழில்களாலும், எல்லாரும் ஒருவர்க்கொருவர் உதவிசெய்து கொள்கின்றனர். எல்லாத் தொழிலும் எல்லார்க்கும் தேவையே. அதனால், எல்லாத்தொழிலுக்கும், அவற்றைச் செய்பவர் தேவைப்படுகின்றனர். ஆகவே, மக்கள் இனம் பிறர் உதவிஇன்றி வாழ்தல் ஒருபோதும் இயலாது.

இவையெல்லாம் உயிர்களிடத்தில், அவைகளும் அறியாமல் தாமாக அமைந்து நடைபெறுவன. ஆதலின், இவற்றை யாரும் அதிகமாகச் சிந்திப்பதில்லை; சிந்தித்து நன்றி பாராட்டுவதும் இல்லை. ஆனால் குறிப்பிட்ட சில சமையங்களில் மக்கள் சிலவற்றிற்குச் சிலரது உதவியை நாடுகின்றனர். அப்பொழுது நாடப்பட்டவரால் செய்யப்படும் அந்தச் செயலையே நன்றி என்றும், அதனைச் செய்தவர்களையே நன்றி செய்தவர் என்றும் நினைக்கின்றனர். அந்த அளவிலேனும் நன்றியை நினைத்து, அதனைச் செய்தவரைப் பாராட்டும் பண்பு மக்களிடத்து இருக்குமாயின் அது, மேலும் மேலும் சிந்தனையைத் தூண்டி, 'எத்துணைப்பேரால் எத்துணை உதவிகளை நாம் பெற்று வாழ்கின்றோம்' என்று எண்ணச்செய்து, 'எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் உடன்பிறந்தவர்' என்னும் ஒற்றுமை உணர்வை உண்டாக்கி, வேற்றுமையை மறக்கச் செய்யும்.

இங்குக் கூறியன பலவும் உயிரினங்களுக்குள் நிகழும் உதவிகள். இவற்றிற்கு மேலான மிகப்பெரிய உதவிகள் பல பல இருக்கின்றன. அவற்றுள் முதற்கண் எளிதில் நமக்கு விளங்குவது மழையினது உதவி "மழையின்றி மாநிலத்தார்க்கில்லை" என்றபடி, மழையினது சிறப்பை எடுத்துக்கூறாத நூல்களும் உண்டோ! திருவள்ளுவர் கடவுளுக்கு அடுத்தபடியாக, மழையையே ஓர் அதிகாரம் முழுவதிலும் புகழ்ந்துரைக்கின்றார். "மாரி யல்லது காரிய மில்லை" என்று முடிவு கட்டினார் ஔவையார். எனவே மழை இல்லையேல் உலகமே இல்லை.

மழை ஒன்றுதானா உயிர்களுக்கு உதவுகின்றது? இன்னும் எத்துணையோ பல பொருள்கள் உயிர்களுக்குப் பேருதவிசெய்து நிற்கின்றன. வானத்தில் அன்றாடம் தோன்றியும், மறைந்தும் காணப்படும் பகலவனால் உலகம் பெறும் நன்மையை அளவிட்டுரைத்தல் கூடுமோ! அதனாலன்றோ இறைவழிபாட்டில் பகலவனை வணங்கும் வணக்கம் முதலாவதாகக் காணப்படுகின்றது! மற்றும் சந்திரன் முதலிய கோள்களும், விண்மீன்களும் அத்தகையனவே. இனிக் காற்றில்லையேல் எந்த உயிர் இருக்கும்? எதுவும் இராது. பூமி இல்லையேல் உயிர்களின் உற்பத்திக்கே வழிஇல்லை. உற்பத்தியான உயிர்களை வளர்ப்பதும் பூமியே. இப்படி எத்தனைப் பொருள்கள் உயிர்களுக்கு உதவியாய் உள்ளன? ஆயினும், இவைகளை உயிர்கட்கு உதவியாக இந்நிலையில் அமைத்தது யார்? இவைகள், தாமே இவ்வகையில் அமைந்தனவோ?

ஞாயிறு, திங்கள், பிறகோள்கள் முதலியன தம் தம் நிலை பிறழாது, தோற்றம் மறைவு முதலிய செயல்களை ஒழுங்குபெறச் செய்து ஒன்றை ஒன்று தாக்காது இயங்கி வருதல், அவற்றின் இயற்கையிலே அமைதல் கூடுமோ?

இன்னும், காற்று அளவோடு வீசி அமைவதும், மழை அளவோடு பெய்து நிற்பதும், கடல் அளவு கடந்து பொங்காது இருந்த நிலையிலே இருப்பதும் இவையெல்லாம் அவ்வவற்றின் இயற்கை என்பது பொருந்துமோ? "ஆழாழி கரையின்றி நிற்கவிலையோ" என்றும், "அந்தரத்து அகிலகோடி தாழாமல் நிலைநிற்க வில்லையோ" என்றும் 'இவற்றையெல்லாம் இவ்வாறு வைத்து நடத்துகின்ற ஒருவன் இருக்கின்றான்; அவனே உலகிற்கு ஒரு முதல்வனாகிய இறைவன்' என்கின்றார் தாயுமானவர். எனவே, அத்தகைய இறைவனாலேயே இவையெல்லாம் நடைபெறுகின்றன. ஆதலால், எத்தனையோபேர்-எத்தனையோ பொருள்கள் - எத்தனையோ வகையில் உயிர்கட்கு உதவியாய் இருக்கிறார்கள் - இருக்கின்றன என்றால், அத்தனை உதவியையும் உயிர்கட்கு மறைந்து நின்று செய்பவன் இறைவனே என்பது தெளிவாகின்றது. ஆயினும், அந்த உதவிகளைப்பற்றியும், அவற்றை என்ஞான்றும் செய்து வருகின்ற இறைவனைப் பற்றியும் நாம் ஒருபொழுதாவது சிந்திக்கின்றோமோ? எல்லா வகையான உதவிகளையும் பெற்றுக்கொண்டு, அவனை நினையாமலே நம் காரியத்தை நாம் பார்த்துக்கொண்டிருக்கின்றோம்.

"உப்பிட்டவரை உள்ளளவும் நினை" என்ற பழமொழிப் படி, ஒரு சிறு உதவி செய்தவரையும் என்றென்றும் மறக்க லாகாது என்பது அறநெறி.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்கிறார் திருவள்ளுவர், உலகில் எப்பொழுதேனும் எவை யேனும் சில உதவிகளைச் செய்தவர்களைப்பற்றியே இவ்வாறு கூறுவராயின், எக்காலத்தும் எல்லா உதவிகளையும் இடையறாது செய்துவரும் இறைவனைப்பற்றி என்ன சொல்வது! இதனை மிகவும் ஆழ்ந்து சிந்தித்த எங்கள் ஆதிபரமாசாரிய மூர்த்திகள் இறைவனை நோக்கிக் கூறிய ஒரு வெண்பாவே முதலில் தரப் பட்டது.

அவ்வெண்பாவில், 'அடியேனுக்கு என்றும் நீ நன்மை செய்கின்றாய்' - என்று அவர்கள் குறிப்பிடுகின்றார்கள். 'என்றும்' என்பதை விளக்கமாக்குதற்கு, 'அன்றுமுதல் இன்றளவும்' என்றும், 'மேலும்' என்றும் விரித்துரைக்கின்றார்கள். 'அன்று' என்றது எதனை? காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் கட்டுண்டுகிடந்த கேவலநிலையை. இந்நிலையில் இறைவன் உயிருக்குச்செய்த நன்மை யாது? கண்ணில்லாதவனுக்கு ஒருகோல் கொடுத்தது போலவும், இருளிலே இருப்பவனுக்கு ஒரு விளக்கைக் கொடுத்ததுபோலவும் உடம்பைக் கொடுத்து, அதன்மூலம் சிறிது அறிவும், சிறிது செயலும் நிகழச்செய்தான்.

பின், 'இன்றளவும்' என்றது எதனை? உடம்பைப் பெற்ற பின் உயிர் தனது ஆணவ பந்தத்திற்கு ஏற்ப நல்வினை தீவினை களைச் செய்ய, அவற்றின் பயனை அனுபவித்தற்கு, நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பின் எண்பத்துநான்கு நூறாயிர யோனிபேதங்களான உடம்புகளையும், அவை உலாவுதற்கான எண்ணில் கோடி அண்டங்களையும், அவற்றில் அதிவிசித்திர மான எண்ணற்ற பொருள்களையும் படைத்து, அவைகளில் மாறிப் பிறந்து வரச்செய்து, அப் பிறப்புக்களிலெல்லாம் பல வகையான அனுபவங்களைத் தந்து வருகின்றான்.

"உரைசேரும் எண்பத்து நான்குநூ றுயிரமாம்
யோனி பேதம்
நிரைசேரப் படைத்தவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே
நின்றான் கோயில்"

என்று அருளுகின்றார் ஞானசம்பந்தர். எல்லா உயிர்களையும் தோற்றுவித்து வளர்ப்பவன் இறைவன் என்பதை,

"கருப்பைக்குள் முட்டைக்கும் கல்லினுள் தேரைக்கும்
விருப்புற் றமுதளிக்கும் மெய்யன்"

என்கின்றார்கள் பெரியோர்கள்.

இங்ஙனம் சொல்லப்பட்ட இந்த நிலையை, 'சகல நிலை' என்று சாத்திரங்கள் கூறும். இனி, 'அன்று முதல் இன்றளவும்' என்று விட்டுவிடாமல், மேலும்' என்றும் அவர்கள் அருளுகின்றார்கள். 'மேலும்' என்றது, முத்திநிலையைத்தான். ஏனெனில், அவர்கள், ஆண்டவன் குருவாய் நின்று ஞானத்தை அருளப்பெற்றவர்கள். அதனால் அவர்கள், இந்த உடம்பு நீங்கியபின் அடைவது முத்தியேயன்றி வேறில்லை. முத்தியை அடைவதற்கு முற்பட்ட பிறப்புநிலை, 'பெத்தம்' எனப்படும். பெத்த நிலையில் உள்ளவர்கள் பெத்தான்மாக்கள். முத்தி நிலையைப் பெற்றவர்கள் முத்தான்மாக்கள். பெத்தநிலையில் தான் இறைவனது உபகாரம் வேண்டும் என்பதில்லை; முத்தி நிலையிலும் அவனது உபகாரம் இன்றியமையாததே. ஏனெனில், உயிர்கள் அறிவிக்க அறிவதன்றித் தாமாக அறிவதென்பது எப்பொழுதும் இல்லை. ஆகவே, பெத்தநிலையில், ஐம்புலன்களை அறிவதற்கு அவற்றை அறிவிக்கின்ற இறைவனது திருவருள் இன்றியமையாதது. அதுபோலவே, முத்திநிலையிலும் உயிர்கள் இறைவனை அறிவதற்கும் இறைவனது திருவருள் இன்றியமையாதது. இதைத்தான், 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' எனக் கூறுகிறார்கள்.

முத்தியின்பமாவது இறைவனது திருவடி இன்பமே. ஆகவே, அத் திருவடியை அறிந்து அவ்வின்பத்தை அனுபவிப்பதும் இறைவனது திருவருளின்றி இயலாது. ஆகவே, முத்தி நிலையிலும் உயிர்களுக்கு இறைவன் நன்மைசெய்பவனாகிறான். அதனால், 'கேவலம், சகலம் என்னும் இரண்டு நிலைகளில் மட்டு

மன்றி, சுத்தம் எனப்படும் முத்திநிலையிலும் நீ நன்மை செய்கின்றாய்' என்று விளக்கி, 'இவ்வாறு எனக்கு நீ என்றும் நன்மை செய்கின்றாய்,' என்று அருளிச்செய்தார்கள்.

இதில் மற்றொரு கருத்தும் காணப்படுகின்றது. அஃதாவது, எனக்கு 'நன்மை செய்கின்றவர்கள் உன்னையன்றிப் பிறர் இல்லை' என்பதோடு, 'நானேகூட எனக்கு நன்மை செய்து கொள்ள இயலாது' என்ற கருத்தும் விளங்குகிறது. நமக்கு நாம் நன்மையைத் தேடிக்கொள்ள விருப்பம் இருப்பினும், எது நன்மை, எது தீமை என்று அறிந்துகொள்ளும் ஆற்றல் நமக்கில்லை. அதனால், தீமையை நன்மையென்று கொண்டு அதனைத் தேடிக்கொள்ளவுங் கூடும். அதனால், நமக்கு வேண்டுவதையும் இறைவனே அறியவல்லவனாகின்றான். இதனை மாணிக்கவாசகர்,

"வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ"

என்று அருளிச்செய்தார் அப்பர்.

"என்னில் ஆரும் எனக்கு இனியார்இலை;
என்னிலும் இனியான் ஒருவன் உளன்;
என்னுளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு
என்னுளே நிற்கும் இன்னம்பர் ஈசனே"

என்று அருளிச்செய்ததும் இந்தக் கருத்திலேதான். ஆகவே, நமக்கு நாமே நன்மைசெய்துகொள்வதும் இயலாததே. அதனால், இறைவனே எல்லார்க்கும் எப்பொழுதும் எல்லா நன்மைகளையும் செய்கின்றான்.

இவ்வாறு செய்கின்ற அவனுக்கு நாம் திரும்பச் செய்யும் கைம்மாறு யாதேனும் உளதோ? இல்லை. 'மக்களில் உயர்ந்தவர்களே கைம்மாறு கருதி ஒருவருக்கு ஓர் உதவியைச் செய்வதில்லை' என்னும்போது, இறைவன் கைம்மாறு கருதியா உயிர்களுக்கு நன்மை செய்கின்றான்? இல்லை! இல்லை!!

"கைம்மாறு வேண்டா கடப்பாடு; மாரிமாட்டு
என்னாற்றுங் கொல்லோ உலகு"

என்ற திருக்குறளையும்,

" எந்தையே ஈசா உடலிடம் கொண்டாய்
யான்இதற் கிலனொர்கைம் மாறே"

என்ற திருவாசகத்தையும் காண்க. இதனையே, எங்கள் பரமாசாரிய மூர்த்திகள்,

" என்றும்நீ நன்மைசெய்வ தன்றி,நான் – ஒன்றேனும்
செய்யுமா றெங்ஙன் "

என்று அருளினார்கள்.

இவற்றையெல்லாம் எடுத்துக்கூறியது எதற்கு? 'கேவல நிலையில் இருந்த என்னை, மாயை கன்மங்களின் வழியே சகல நிலையிற் கொணர்ந்து, சகல நிலையில் பக்குவம் பார்த்துக் குருவாகிவந்து ஞானத்தை அருளினாய்; இனி அந்த ஞானத்தின் வழியே அடுத்த பிறப்பில்லாமல் இப்பிறப்பு நீங்கிய உடனே நான் முத்தியைப் பெறுவதற்கு வழி யாது? அதனைச் சொல்லியருளவேண்டும்' என்பதற்குத்தான் இவற்றை எல்லாம் எடுத்துக் கூறினார்கள். ஆகவே, "இனி நான் உய்யுமாறு எவ்வாறு உரை" என்று முடித்தருளினார்கள்.

அவர்களுக்கு உய்யுமாறு, முத்தியைப் பெறுவது; நமக்கு உய்யுமாறு, ஞானத்தைப் பெறுவது. ஆகவே, நாமும் அவர்களது அருள்வாக்கைக்கொண்டே, 'நீ அன்றுமுதல் இன்றுவரை எங்களுக்கு நன்மைசெய்து வருகின்றாய்; இனி உய்யுமாறு எவ்வாறு? உரை' என்று கேட்கலாம். உண்மையன்போடு இத் திருவெண்பாவைக் கொண்டு இறைவனைக் கேட்கும் நிலை நமக்கு உண்டாகுமாயின், இறைவன் நம் முறையீட்டைக் கேட்டு எழுந்தருளிவந்து அருள்புரிதல் திண்ணம்.

எல்லார்க்கும் உய்யும்வழி, இறைவனை மறவாமை ஒன்றே.

" இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டு கின்றார்,
பிறவாமை வேண்டும்; மீண்டும் பிறப்புண்டேல் உன்னை [என்றும்
மறவாமை வேண்டும் "

என்று வேண்டினார் காரைக்கால் அம்மையார்.

" புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி
என்மனத்தே
வழுவா திருக்க வரந்தரல் வேண்டும் "

என்பது அப்பர் திருவாக்கு.

இறைவனை மறக்கும் நிலை தோன்றுதிருத்தற்பொருட்டு எங்கள் குருஞானசம்பந்தர் முன்னே சில வெண்பாக்களில் சிலவற்றைச் சொல்லியுள்ளார்கள்;

' தனு கரணங்களை நானோ படைத்தேன் ? நானோ அவைகளை நடத்துகின்றேன் ? உயிர்கள்முன் தோன்றுமல் மறைந்திருந்தே அவைகளைத் தனுவாதிகளில் பொருத்தி ஆட்டுகின்ற உன்னுடைய செயல் மிகவும் ஆச்சரியமானது. எந்த ஒரு செயலையும் நீ நிச்சயித்துச் செய்விக்க உயிர்கள் செய்கின்றவேயன்றி, அவைகள் தாமாக ஒன்றையும் செய்ய இயலாது. ஆகையால், நான் இவ்வுலகத்தில் எதையும் விரும்பித் திரும்பாமல், நிட்டையிலேயே இருக்கச் செய் '

இவையெல்லாம் எவ்விடத்திலும், எப்பொருளிலும், இறைவனையே நினைப்பிக்கும் மெய்ம்மொழிகளாகும். ஆதலின், இத்தகைய அருட்டிருமொழிகளை ஓதி, உய்யும் நெறியைப் பெறுவோமாக.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

**Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.**

We came with family and friends to get the blessing of Sri Vaidyanadhaswamy on the eve of my taking charge as Director of Medical Education. I am confident with his blessings, I will be able to carry out my duties to the best of our peoples welfare.

I have visited many temples but the inspiration, I had on this occasion is remarkable.

(Sd.) T. Janardhanam,
31—5—66, Director of Medical Education.

# சித்தாந்த வினாவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
மகாவித்துவான்.

திரு. சி. அருணைவடிவேலு முதலியார்

( மலர் 25, இதழ் 8, பக்கம் 353 இன் தொடர்ச்சி )

## உயிரின் பரிமாணம் ( அளவு )

மாணக்கன் : பசு எனப்படும் உயிர், 'பதி, பாசம்' என்னும் இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையை உடையதாயின், அதன் அளவு எவ்வகையினது? அஃதாவது, பதி, ஏனை எல்லாப் பொருள்களினும் பெரிதாய் எல்லையின்றி நிற்பது; மண், நீர், காற்று முதலியனவாகக் காணப்படும் பாசங்கள் ஓவ்வோரளவில் பரந்திருப்பது. இவைகள் அணுக்களின் கூட்டம் என்றும் சொல்லப்படுகின்றன. இவைபோல உயிர் எந்த அளவினதாய் உள்ளது?

ஆசிரியர் : நிலம், நீர் முதலிய எல்லாவற்றையும் அணு என்றே கொள்வோரில் ஒருசாரார் ( பாஞ்சராத்திரிகள் ), உயிரையும் அணுவளவினது, என்றே கூறுவர். அவ்வாறாயின், உடம்பில் எண்ணற்ற துவாரங்கள் இருப்பதனால், உயிர் யாதேனும் ஒரு துவாரத்தால் ஓடிவிடாது, நெடுங்காலம் அதன் கண்ணே கட்டுண்டிருத்தல் கூடுமோ? கன்மத்தால் அவ்வாறு ஓடாது கட்டுண்டு நிற்குமெனின், சூக்குமமாகிய கன்மம் தூலமாகிய உடம்பில் அணுவைத் தடுத்து நிறுத்தமாட்டாது. நிறுத்துமெனின், ஆக்கள், எருமைகள், யானைகள் முதலியனவும் கயிறு முதலியன இன்றியே தம்தம் தறிகளில் கன்மத்தால் கட்டுண்டிருத்தலும், களவொடு கையகப்பட்ட கள்வர் முதலியோர், விலங்கும், சிறைக்கோட்டமும் இன்றியே தடையுண்டு நிற்றலும் வேண்டும். அவை கூடாமையால், சூக்குமமாகிய கன்மம், தூலப்பொருளைத் தூலப்பொருள் வாயிலாகப் பிணிக்குமன்றித் தானே பிணிக்கமாட்டாது என்பது பெறப்படும். படவே, உயிர் அணுவளவினதாயின், உடம்பில் நில்லாது வீழ்ந்துவிடும் என்பது தெளிவு. அணுவும் தூலமாதல் அறிந்து கொள்க.

இன்னும் உயிர் ஒரு பரமாணு அளவினதாயின், அதனினும் பன்மடங்கு பெரிதாய உடம்பினை அஃது எப்படிப் பலவகையில் செயற்படுத்துதல் கூடும்? உயிரின் அளவு அணுவேயாயினும், அதன் ஆற்றல் பெரிதெனின், அவ்வாற்றல் உடல் முழுதும் வியாபிக்கும் எனக் கொள்ளுதல் வேண்டும். அவ்வாறு கொள்ளின், ஆற்றல் என்பது பொருளின் வேறன்மையால், 'உயிர், அணு' என்னும் வாதம் தோல்வியுறும். ஆகவே, உயிருக்கு அணுபரிமாணம் கூறுதல் பொருந்தாதாம்.

மாணுக்கன் : உயிரினை அணு என்னுது, அஃது உடம்பில் ஓரிடத்தில் விளக்குப்போல இருக்க, அதன் ஆற்றல் விளக்கொளிபோல உடம்பு முழுதும் பரவும் எனக் கொள்ளுதல் கூடாதோ?

ஆசிரியர் : அவ்வாறுதான் சிலர் (மிருதிநூலோர்) கூறுகின்றனர், அஃதாவது, உயிர் இருதயமாகிய ஓர் இடத்தில் புல்நுனிமேல் நிற்கும் பனித்துளி அளவினதாய் நிற்க, அதன் ஆற்றல் உடம்பெங்கும் வியாபிக்கும் என்கின்றனர். அதுவும் பொருந்துமாறில்லை. ஏனெனின், விளக்கு, தூலமாய்க் காணப்படுவதும், அதன் ஒளி, சூக்குமமாய்ப் பரவுதலும் வெளிப்படை. அதுபோல, உயிரின் ஆற்றல் சூக்குமமாய்க் காணப்படாத நிலையில் உடம்பெங்கும் பரவி இருக்க, உயிர் இருதயத் தானத்தில் புல்நுனிமேல் பனித்துளி போலக் கட்புலனுய்க் காணப்படுதல் வேண்டும். கண்ணுக்குப் புலனுகாத நுண்மைத்தெனின், வேறு எவ்வாற்ருலேனும் அஃது அகப்படுதல் வேண்டும். அதுவும் கூடாது எனின், 'உடம்பெங்கும் பரவும்' என்ற ஆற்றலுக்கும், இருதயத் தானத்தில் நிற்கும்' என்ற உயிருக்கும் வேற்றுமை 'இன்ருமாகலின், அவ்வாதம் தோற்ருெழியும்.

இன்னும் விளக்கொளி பரவியுள்ள இடங்களில் பொருள்கள் விளங்கியே நிற்றல்போல, 'மெய், வாய், கண், மூக்கு, செவி' என்னும் ஐம்பொறிகளிலும் எப்பொழுதும் அறிவு தடைப்படாது நிகழ்ந்துகொண்டே இருத்தல் வேண்டும். ஏனெனில், உயிர் இருதயத்தானத்தில் உள்ளவரையில் அதன் ஆற்றல் உடம்பெங்கும் பரவியே இருத்தல்வேண்டுமாதலின். உயிரினது ஆற்றல் உடம்பெங்கும் பரவியிருப்பினும், அது, கன்மத்துக்கீடாக ஒவ்வோர் இடத்தே விளங்கும் எனின், எப்பொழுதாயினும் முழுவதும் விளங்குதலும் நிகழ்தல் வேண்டும். அஃது ஒருபோதும் இன்மையால், உயிரின் ஆற்றல் உடம்பெங்கும் பரவி நிற்கும் என்றற்குச் சான்றில்லை. அதனுல், அவ்வாதமும் பொருத்தமற்றதேயாம்.

மாணுக்கன் : உயிர், தான் எடுத்த உடம்பின் அளவே அளவாய் நிற்கும் தன்மையது என்று கொண்டால் என்னை ?

ஆசிரியர் : ஆம்! சமண் சமயத்தினர் அவ்வாறுதான் கூறுகின்றனர். அஃதாவது, 'உயிர், செழுகம் (அட்டை என்னும் நீர்ப்பூச்சி) போல நீளுதல் சுருங்குதல்களை அடையும் தன்மையது; அதனுல், தான் எடுத்த உடம்பின் அளவே அளவாய், அதன்கண் நிறைந்து நிற்கும்' என்பர். அதுவும் பொருந்தாது. எவ்வாறு எனின், உயிர் உடம்பின் அளவே அளவாய் விரிந்தும், சுருங்கியும் நிற்கும் எனின், பெரிய உடம்புடைய உயிர்கள் பேரறிவுடையனவாயும், சிறிய உடம்புடைய உயிர்கள் சிற்றறிவுடையனவாயும் இருத்தல்வேண்டும். மக்களிலும், பேருடம்புடையோர் பேரறிவினராயும், சிற்றுடம்புடையோர் சிற்றறிவினராயும் இருத்தல் வேண்டும். அனுபவத்தில் அவ்வாறு இருக்கக் காணவில்லை; மாறியும் காணப்படுகின்றது. மேலும், உடம்பில் சில உறுப்புக்களை அறுத்தெறிந்தால், அறிவும் உடன் குறைந்து காணப்படவேண்டும். அஃது இல்லை. ஆகவே, உயிர், உடம்பின் அளவே அளவாய் நிற்கும் தன்மையது என்பதும் பொருந்துமாறில்லை.

மாணுக்கன் : உயிர், உடம்பில் ஓரிடத்து நிற்கும் என்பதும், உடம்பளவாய் நிறைந்து நிற்கும் என்பதும் ஆகிய இரு கொள்கைகளும் பொருந்தா எனின், இறைவன்போல உயிரும் எங்கும் உள்ள பொருளோ ?

ஆசிரியர் : ஒருசாரார் (ஐக்கியவாத சைவர்) அங்ஙனம் உள்ளதாகத்தான் கூறுகின்றனர். உயிர் அவ்வாறு எங்கும் உள்ளது எனின், முன் கூறியது போல, ஒருகாலத்திலே ஐம் பொறிகளிலும் அறிவு நிகழாது. ஒவ்வொரு காலத்தில் ஒவ்வொரு பொறியில் மட்டும் அறிவு நிகழ்தற்குக் காரணம் கூறல்வேண்டும். மேலும், உடம்பிற்கு அப்பால் அறிவு நிகழாமைக்கும், இறத்தல் பிறத்தல்களால் விண்ணிலும். மண்ணிலும் போதல் வருதல் நிகழ்தற்கும் காரணம் கூறல் வேண்டும். அது கூடாமையால், உயிர் இறைவன்போலவே எங்கும் வியாபியாய் நிற்கும் என்றலும் பொருந்துமாறில்லை.

மாணுக்கன் : உயிர் உடம்பினுள் ஓரிடத்தில் சிறிதாய் நிற்கும் என அணு பரிமாணங் கூறுதலும், இறைவன்போல எங்குமாய் நிற்கும் என மகத்துப் பரிமாணங் கூறுதலும், எடுத்த உடம்பின் அளவாய் நிற்கும் என மத்திம பரிமாணங் கூறுதலும் ஆகிய இவற்றுள் ஒன்றேனும் பொருந்துவதில்லையாயின், உயிரை மற்று எவ்வளவினதாகக் கூறுவது ?

ஆசிரியர்: கூறுதற்கு வழிஇல்லாமற் போகவில்லை. உயிர் உடம்பினுள் ஓரிடத்தே நிற்கும் என்னும் அணு பரிமாணமும், எடுத்த உடம்பின் அளவாய் நிற்கும் என்னும் மத்திம பரிமாண மும் எவ்வாற்றானும் பொருந்தாதனவேயாம். இனி மகத்துப் பரிமாணம் கூறுமிடத்து. 'இறைவன்போல' என்பது மாத்திரமே பொருந்தாது. மற்று. 'இறைவனது வியாபகத்தின்கீழ் அடங் கிய வியாபகமாய் நிற்கும்' என்றலே பொருந்துவதாம். ஆகவே, மேற்கூறிய பிற இயல்புகளிற்போலப் பரிமாணத்திலும் இடைப்பட்ட நிலையையே உடையது உயிர் என்பது விளங்கும். அஃதாவது, உயிர், பதியை நோக்க வியாப்பியமாயும், பாசங் களை நோக்க வியாபகமாயும் நிற்கும் என்பதாம். அங்ஙன மாயின், இதனை, 'மத்திம பரிமாணம்' என்னலாகாதே எனின், ஆகாது. ஏனெனின், பல்லாயிரகோடி அண்டங்களாய் வியா பித்து நிற்கும் மாயைக்கும் மேற்பட்ட வியாபகமாய், இறைவனை லன்றிப் பிறிதொரு பொருளாலும் வரையறுக்கப்படாததாய் நிற்பதனை, குடம், ஆடை, நிலம், நீர் முதலியனபோல மத்திம பரிமாணம் உடையது என்றல் பொருந்துமோ! இவ்வாற்றால் உயிருக்கு மகத்துப் பரிமாணமே சைவசித்தாந்தத்துள் கூறப் படுகின்றது என்பது விளங்கும். 'ஆன்மா' என்னும் சொல் லுக்கே, 'வியாபகம்' என்பதுதான் பொருள் என்கின்றது சைவசித்தாந்தம்.

மாணுக்கன்: ஆன்மாவுக்கு இங்ஙனம் மகத்துப் பரிமாணங் கூறின், முன்னர்க் கூறிய குற்றங்கள் எய்தாவோ? அஃதாவது, ஆன்மா வியாபகப் பொருளாயின், ஒரு காலத்திலே ஐம்புலன் களையும் ஏன் அறியவில்லை? உடம்பளவில் அல்லாமல் அதற்கு அப்பால் ஏன் அறிவு நிகழவில்லை? இவ்வுலகத்தில் வாழும் பொழுதே ஓரிடம்விட்டு மற்றோரிடம் செல்வதும், இறந்த பின்னர் விண்ணில் செல்வதும், பிறக்கும்பொழுது மண்ணில் வருவதும் ஏன் நிகழ்கின்றன? என்பனபோன்ற தடைகள் நிகழுமன்றோ?

ஆசிரியர்: ஆம்! அத்தடைகள் நிகழ்வது இயல்பே. அதற்கெல்லாம் விடைகள், முற்கூறிய ஆன்ம இயல்புகளை உற்றுநோக்கின் விளங்கும்.

மாணுக்கன்: அஃது எவ்வாறு?

ஆசிரியர்: ஆன்மா இறைவனை நோக்கத் தூலப் பொரு ளாகலானும், சார்ந்ததன் வண்ணமாய் நிற்றலே அதன் உண்மை இயல்பு ஆகலானும் அது, அனாதியே பாசத்தில்

அழுந்தும் தன்மையுடையதாய், ஆணவமலத்தால் மறைக்கப்பட்டு, தானென்பது ஒருபொருள் தோன்ருமல் ஆணவமாயே நின்றது. அவ்வாணவத்தை நீக்கும் மாற்றுப்பொருளாக இறைவன் மாயையின் காரியமாகிய உடம்பை ஆன்மாவிற்குக் கூட்டியருளினுன். அதனுல், அவ்வாணவமலம் உடம்பளவில் சிறிது விலகிநிற்கின்றது. ஆகவே. உடம்பளவில் ஆன்மா விளக்கம் பெற்று நிற்றலின், உடம்பின் அளவே உயிரின் அளவுபோலத் தோன்ற, அதற்கேற்பக் கூறும் அணு பரிமாண வாதமும், மத்திம பரிமாண வாதமும் எழுகின்றன. எனவே, வியாபகப் பொருளான ஆன்மாவை இங்ஙனம் உடம்பளவினதாகச் செய்தது ஆணவ மலத்தின் செயலாகிய செயற்கையேயன்றி, உயிருக்கு உள்ள இயற்கையன்று. மகத்தாயுள்ள ஆன்மாவை அணுவாக்குதல்பற்றி வந்த காரணப் பெயரே 'ஆணவம்' என்பது.

ஆணவ மலத்திற்கு மாற்ருய் உள்ளது உடம்பு ஆதலின், அஃது உள்ள இடத்தில் ஆன்மாவிற்கு அறிவு நிகழ்தலும், ஏனை இடத்தில் அறிவு நிகழாமையும் இயற்கையாகின்றன. ஆகவே, ஆன்மா ஒன்றை அறியவும், செய்யவும் விரும்பும் இடத்திற்கு, இறைவனுல் தனக்குக் கொடுக்கப்பட்ட உடம்பைச் செலுத்துகின்றது. அங்ஙனம் செலுத்தப்பட்டுச் செல்லுகின்ற உடம்பினது இடப்பெயர்ச்சியையே உயிரினது இடப்பெயர்ச்சியாக நாம் நினைக்கின்ருேம். உண்மையில், இடம்விட்டுப் பெயர்வது உடம்பேயன்றி, உயிரன்று. ஆயினும், இவ்வுண்மை தத்துவ ஆராய்ச்சியில் - அதனுள்ளும் ஆன்மாவின் இயல்பை நுனித்துணருமிடத்தில் விளங்குவதன்றி, ஏனையிடங்களில் விளங்காமையால், வழக்கத்தில்மட்டுமன்றி, நூல்களிலுங்கூட, உயிரே போக்குவரவு புரிவதுபோலக் கூறப்படுகின்றது.

" துறக்கப் படாத உடலைத் துறந்துவெந்
தூதுவரோடு
இறப்பன்; இறந்தால் இருவிசும் பேறுவன்;
ஏறிவந்து
பிறப்பன்: பிறந்தால் பிறையணி வார்சடைப்
பிஞ்ஞகன்பேர்
மறப்பன் கொலோ என்றென் உள்ளங் கிடந்து
மறுகிடுமே"

(திருமுறை - 4)

" இருவினையின் - போக்கு வரவு புரிய"

(சிவஞானபோதம் - சூ. 2.)

"மலம்மாயை கன்மம் மாயே யந்திரோ தாயி மன்னிச்
சலமாரும் பிறப்பி றப்பில் தங்கிஇத் தரைகீழ் மேலும்
நிலையாத கொள்ளி வட்டம் கறங்கென நிமிடத் தின்கண்
அலமாரும், இறைவன் ஆணை யால்உயிர் நடக்கு மன்றே"
(சிவஞானசித்தி, சூ. 2. 88.)

என்றாற்போல வருவன பலவும் இவ்வாறெழுந்தனவே. பொதுமை நோக்கால் இவ்வாறு கூறினும், உண்மை நோக்கில் ஆன்மா வியாபகப் பொருள் என்பதே கருத்து. அங்ஙன மாயினும் உயிர் இறைவனது வியாபகத்துள் வியாப்பியமேயாக லின்; அந்நிலையை அவனது திருவடிக்கீழ் நிற்றலாகவே அருளிச்செய்வர் ஆசிரியர் பலரும்.

"அம்மா னடிநிழற் கீழதன்றோ என்றன் ஆருயிரே"
(திருமுறை, 4. 84. 10.)

"இருகாற் குரம்பை இதுநான் உடையது; இதுபிரிந்தால்,
தருவாய் எனக்குன்றன் திருவடிக் கீழொர் தலைமறைவே',
(திருமுறை 4, 113. 2.)

என்றாற்போல வருவன பலவுங் காண்க. இங்ஙனம் அன்றாயின்' திருவடிக்கீழ் இருத்தல் என்பது, உண்மைப் பொருள்படுமா றில்லை. உயிர் எங்குமாய் நிற்பது எனக் கூறின், அது முன்னர்க் கூறிய ஐக்கியவாதக் கொள்கை அல்லது ஏகான்மவாதக் கொள்கைகளோடு ஒன்றுபட நோக்கி ஐயுற நிற்குமாதலின். ஆசிரியன்மார் அவ்வாய்பாட்டால் அருளாது, உயிர் இறைவ னது அடிநிழலில் நிற்பதெனவே யாண்டும் அருள் செய்வர் என்றுணர்க.

மாணாக்கன்: இவையெல்லாம் உண்மையேயாயினும், உடம்பின்கண் உயிர் எல்லாப் புலன்களையும் ஒருங்குணராமை என்னை ?

ஆசிரியர்: அதுவும் ஆன்மாவின் இயல்பு கூறியவிடத்தே சொல்லப்பட்டது. அஃதாவது, உயிர், பொருள்களை ஒவ்வொன் றாய் அறியும் தன்மையதேயன்றி, இறைவன்போல எல்லாவற் றையும் ஒருங்கே அறியமாட்டாது. ஆதலின், ஒருகாலத்து ஒருபொறியைச் செலுத்தி ஒருபுலனை அறிவதல்லாது, எல்லாப் பொறிகளையும் ஒருங்கே செலுத்தி, எல்லாப் புலன்களையும் ஒருங்கே அறியமாட்டாது எனக் கூறினோம் ஆதலின், ஐம்புலன் களையும் ஒருங்கே அறியாததுபற்றி ஆன்மா வியாபகப் பொரு ளாதற்குத் தடை இல்லை. எனவே, எவ்வாற்றானும் ஆன்மா வியாபகமாவதல்லது, பிறிதாகாது என்று உணர்ந்துகொள்க.

(தொடரும்)

# "பண்டைத் தமிழர் மருத்துவம்"

**திரு. T. V. சிவசண்முகம் B. A.**

(மலர் 25, இதழ் 8 பக்கம் 331இன் தொடர்ச்சி)

## அகத்தியர் ஆற்றிய அறுவைச் சிகிச்சை:

ஒருமுறை தேவர் தலைவருக்குச் சொல்லொணாத் தலைவலி ஏற்பட்டதாம். அவ்வலியைப் போக்குவோர் 'அவ் வுலகில்' ஒருவருமில்லையாதலால் பூவுலகத்து அகத்தியரை அணுகினராம். இன்று நம் மருத்துவரிடையே பழக்கத்திலுள்ள X-Ray எடுத்தல் போன்றதொரு முறையினால் அவர் தலையினை அகத்திய முனிவர் சோதித்து, அவர் தம் தலையினுள்ளே தேரை (தவளை) யொன்று இருத்தலே தலைவலிக்குக் காரணமென அறிந்து அதனை அறுவைச் சிகிச்சையின் மூலம் அப்புறப்படுத்தினால் தலைவலி தீருமெனக் கண்டு அறுவைச் சிகிச்சைக்கு நோயாளியின் இசைவுபெற்றுச் 'சிகிச்சையினைத் துவங்கினாராம். தலையினுள்ளே தேரை காணப்பட்டதாம்; அதனை எவ்வாறு அப்புறப்படுத்துவதென ஒரு கணம் சிந்தித்தாராம்; கருவிகொண்டு அதனை நீக்கும்போது அத் தேரை தன் கால்களால் நோயாளியின் மூளையினை இறுகப் பற்றிக்கொண்டால், தேரையுடன் மூளையும் வெளியே வந்து மூளை குழப்பமேற்பட்டால் நோயாளியின் உயிருக்கே ஊறு நேருமென எண்ணினாராம்: ஆகவே அத் தேரை தானாகவே வெளியேற வழிசெய்ய எண்ணினாராம்; இந்நிலையில் அவர் மாணவர் தேரையர் பாத்திரமொன்றில் நீர் கொண்டுவந்து தேரையின் எதிரில் காட்ட, நீரைக்கண்ட தேரை அதில் குதித்துவிட்டதாம். இதனால் சிகிச்சை எளிதில் இனிது முடிந்ததெனக் கூறப்படுகிறது. இதிலிருந்து, உளநூல் துணைகொண்டு மருத்துவம் செய்தல் பண்டுமுதலே அறியப்பட்டிருந்ததென்பதும், அறுவைச் சிகிச்சை பண்டைத் தமிழரின் சிகிச்சை முறையே என்பதும் அறியலாமல்லவா!

## ஊசிமூலம் மருந்தேற்றலில் பண்டைய முறை:

உலகினைத் தாங்கிக் காக்கும் ஆதிசேடனென்ற பாம்புக்கு ஒருமுறை தீராத வயிற்றுவலி ஏற்பட்டதாம்; அகத்தியர் மருந்து பல கொடுத்தும் வலி தீரவில்லையாம்; ஆதிசேடன்

வாயிலுள்ள நச்சுப் பல்லிலிருந்து வழியும் நஞ்சு மருந்துடன் கலந்ததால் மருந்தின் வீரியம் குன்றி அகத்தியர் அளித்த மருந்து வேலைசெய்ய இயலாமற் போய்விட்டதையறிந்த தேரையர் மூங்கிற் குழாய் ஒன்றின் வழியாக நச்சுப்பல்லில் படாதபடி மருந்தினை உள்ளே செலுத்த அம் மருந்து பலன் தந்து வலிதீர்ந்ததெனக் கூறுகின்றனர். இம் முறையின் முதிர்ச்சியே ஊசிமூலம் மருந்தேற்றுவதாக இன்று வளர்ச்சி யடைந்துள்ளது.

இறைவனே பிணி தீர்க்கும் மருத்துவர். வைத்தியநாதன் என்று அவரைப் போற்றுகின்றோம். என்றும் நம் மறச்செயல் களாகிய பிணியைப் போக்கி அருள் வைத்தியம் செய்துவரு கின்றாரல்லவா! இறைவனே வியக்கும்வண்ணம் மருத்துவக் கலையில் சிறந்த தமிழர்கள் தேவர்களுக்கே மருத்துவம் பார்த்த செய்தி வியத்தற்குரியதன்றோ !

## தமிழ் மருத்துவம் வளராத காரணமென்ன ?

பலதுறைகளிலும் சிறந்து, பிறரால் வியக்கத்தக்கதாய் ஒளிவீசிய பண்டைத் தமிழரின் மருத்துவக்கலை இன்று தன் ஒளி இழந்து பிற நாட்டு மருத்துவக் கலைகளுக்கீடாய் முன்னிற்க மாட்டாத காரணமென்ன ?

மருத்துவ நூல்கள் முதலில் பெரும்பாலும் வேதங்களைப் போன்று வாய்மொழியாகவே வளர்ந்தன ; பின்னாளில் நூலாகத் தொகுக்குங்கால் பல குறிப்புக்கள் கிடைக்காதொழிந்தன.' மேலும் தமிழர் மருத்துவத்திற்கான மூலிகைகளின் பெயர்களை மறைமுகப் பெயர்களாகவே (Techinical terns) வைத்தனர்; மூலிகைகளின் பெயர்களை நோயாளி அறிந்தால் அம் மருந்து பலிதமுறாதெனக் கூறி வைத்தனர்; மூலிகைகளை நோயாளி களிடம் நேரிடையாகக் காட்டாது, அதனைக் கசக்கிச் சாறு பிழிந்த பின்னரே காண வைத்தனர்.

மருத்துவக்கலையின் நுணுக்கங்களை ஒருவன் தன் வாழ்நாள் முழுவதும் பிறருக்குக் கூறாது மறைத்து வைத்திருந்து மாளும் போதுதான் பிறரிடம் கூறுதல் வழக்கம். மருத்துவர் மாளும் வருத்தம் காரணமாக அவர் கூறும் நுணுக்கங்களைச் செவி சாய்க்காத காரணத்தால் அரிய பல உண்மைகள் கிடைக்கா தொழிந்தன.

மேலும் நாடு புரக்கும் அரசு மாறுதலடைந்து அன்னியர் பதவி ஏற்குங்கால் அவர்கள் மருத்துவக் கலையினைத் தணிக்க

லாயினர். ஆரிய இனத்தின் கலப்புக் காரணமாக 'ஆயுள் வேதம்' என்ற மருத்துவ முறையும், முகலாயப் பரம்பரையினரால் 'யூனானி மருத்துவமும்' திணிக்கப்பட்டதோடல்லாது, ஆங்கில அரசினர் நசுக்கிய நமது கலைகளில் மருத்துவக்கலையுமொன்ருகச் சேர்க்கப்பட்டுவிட்டது. ஆங்கிலக் கல்வி செழிக்க அவர்கள் மருத்துவக்கலையும் செழிக்கலாயிற்று. இக் காரணங்களினால் தமிழ் மருத்துவ வளர்ச்சிக்கு ஓரளவு தடைகள் ஏற்பட்டன.

## இன்று தமிழ் மருத்துவத்தின் நிலை :

தமிழ்மொழிக்கு இன்னல் பல நேர்ந்தபோதும் அதன் சீரிளமைத்திறம் குன்ருது செழித்தோங்கி வருதல்போன்றே தமிழ் மருத்துவக்கலையும் வளர்ந்து வருகின்றது. உரிமை பெற்ற நாட்டில் இன்று நம்மனோர் பண்டைக் கலைகளைப் பேணலில் கருத்தைச் செலுத்துகின்றனர். தமிழ் மருத்துவத்தினை வளர்க்கும் நற்பணியில் அரசு முயன்றுவருகின்றது. ஆங்காங்கே சித்த மருத்துவ மனைகளைத் திறப்பதோடன்றி. சித்த மருத்துவக் கல்லூரிகளையும் அமைத்து வருகின்றனர். இத்துறையில் ஆராய்ச்சிக்கான ஏற்பாடுகளையும் அமைத்து வருகின்றனர். ஆங்கில மருத்துவம் கற்ரேரும் சித்த வைத்தியத்தை ஆங்காங்கே உபயோகித்து வருகின்றனர். இதனால் பண்டைத் தமிழரின் மருத்துவக்கலை மேன்மேலும் வளர்ச்சியுற வாய்ப்புண்டு.

நம்நாட்டு வெப்பநிலைக்கு ஏற்றது சித்தவைத்தியமே. ஆங்கில மருத்துவம் அந்நாட்டுச் சூழலுக்கு ஏற்றதுதான் ; ஆயின் இம்மருத்துவ முறை நம்நாட்டுச் சூழலுக்கு ஏற்றதல்ல ; நமக்கு ஏற்றது சித்தவைத்தியமே. ஆகவே இம் மருத்துவ முறை வளர்ச்சியில் தமிழ்ச் சான்ருேர் கருத்தைச் செலுத்துவார்களாக.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

### Sri Vaithianathaswamy Devasthanam, Vaithiswarankoil

We had the rare privelege of visiting this ancient temple. We were struck by the cleanliness with which the temple is maintained and it is indeed creditable to the Dharmapuram Adheenam which maintains the temple. We return with the feeling that we should come again and again and have darshan of this famous deity.

(Sd.) T. D. Sundarraj,

5—6—66. District Revenue Officer, Cuddalore.

உ

சிவமயம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

25 ஆவது குருமகாசந்நிதானம்

# ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

திருமுன்

திரிசிரபுரம் தாயுமானுர் திருக்கோவில் திருப்பணித் தொண்டர்கள்

சமர்ப்பித்த

# தமிழ்த் தூது

அருள்நிறைந்த சைவநெறி அவனியெங்கும் பரவி
ஆட்சிசெய மெய்கண்டார் உபதேசம் புரிந்த
குருமரபில் அவதரித்த ஞானசம் பந்தக்
குருமணியின் வழிவந்தே அருட்செங்கோல் ஓச்சும்
தருமையா தீனத்தின் தவக்கொழுந்தாய் இன்று
சைவநெறி காத்துவரும் தமிழ்முனிவ! தங்கள்
திருவடிகள் பணிந்தேத்தித் தாயுமானுர்க் கன்பர்
சிரம்தாழ்த்தி வணங்குகிருேம் குருமணியே போற்றி.

சிரபுரத்தில் கோவில்கொண்ட சிவபெருமான் அன்று
செட்டிப்பெண் துயர்தீர்க்க செந்தமிழ்த்தாய் ஆனன்
பரவுபுகழ் மகேந்திரபல் லவனுர் அன்று
பார்புகழும் நாவரசர் பக்திநெறி கண்டு
கரமேந்தி சிராமலையான் திருக்கோவில் கட்டி
கைதொழுது சைவனென முடிவணங்கி நின்றுர்
வரமருளும் சிராமலையான் திருக்கோவில் காத்து
மௌனமடம் தான்அமைத்து வளர்த்துவரும் மேலோர்.

மரபுதித்த தருமை யாதீனத்துக் குருமார்
மாண்புயர்ந்த சைவநெறி ஒளிவிளக்காய் இன்று
திருமரபு விளங்கிடவே திருச்செங்கோல் ஓச்சும்
தினகரனே! தேசிகனே! செந்தமிழே! சிவமே!
குருமணியே! தவக்கனலே! எம்முளத்தின் தாபம்
கொண்டுன்றன் சன்னிதியில் வந்தடைந்து நின்றே
பெருமவின்றன் முன்றிலிலே தமிழ்த்தூது கேட்டுப்
பெம்மானே! குறைதீர்த்தே அருள்புரிய வேண்டும்.

தாயானுன் திருக்கோவில் திருப்பணிகள் செய்யச்
சான்றோர்கள் சிலர்கூடித் திட்டமிட, மக்கள்
ஓயாது நிதிஉதவி திருப்பணிக்கே ஊக்கம்
ஊட்டிவிட்டார் திருப்பணிகள் முடிவுபெறுந் தருணம்
தாயானுன் திருமகனுய் தருமையா தீனத்தில்
தான்விளங்கும் சுப்ரமண்ய தேசிகனே! முருகே!
தாயானுன் தமையனுக்கே கனிகொடுத்தார் என்றே
தமிழே! பிணங்கியிங்கே இருப்பதுவும் தகுமோ?

சிராமலையான் திருக்கோவில் திருப்பணிகள் முடித்துச்
சிறப்புடனே குடமுழுக்குச் சிவனருளால் சிறக்கப்
பராபவஎனும் ஆண்டினிலே ஆவணியாம் மாதம்
பதின்மூன்றும் தேதியென நாள்குறித்தோம் பெரும!
தராதலத்தில் கைலைமலை சென்றிறைவன் தன்னைத்
தான்தொழுது வழிபட்ட தவமுனிவ! தாங்கள்
சிராமலையான் திருக்கோவில் திருக்குடநீர் ஆட்டும்
திருவிழாத் தனக்குவந்தே திருத்தலைமை தாங்கி.

சிவனடியார் மனமகிழ சைவநெறி ஓங்க
செந்தமிழர் உளம்நெகிழ மெய்யடியார் போற்ற
தவக்குன்றே! சிராமலையான் தனிச்செல்வக் குமரா!
தானிருந்து சிறப்பிக்கத் தயவுசெய்ய வேண்டும்;
அவனருளால் எம்மனத்தே எழுந்திட்ட வேட்கை
அருள்மணியே! சன்னிதியில் தமிழ்த்தூது கேட்டுச்
சிவக்கொழுந்தே! சிராமலையான் திருவுளமே மகிழத்
திருத்தொண்டர் புடைசூழ எழுந்தருள் வேண்டும்.

இங்ஙனம்,

**தாயுமானுர் திருக்கோவில் திருப்பணித் தொண்டர்கள்,**
திருச்சிராப்பள்ளி.

# தையல்நாயகி அந்தாதி

[ மூலமும் உரையும் ]

*( மலர் 25, இதழ் 8, பக்கம் 336 இன் தொடர்ச்சி )*

அந்தரிக் கப்பட்ட நெல்லின் பிணியா லலக்கணுற்றேன்
நந்தரிக் குத்தங்கை யேயுன் றிருப்புகழ் நாவரும்பா
மந்தரின் மந்த மிகவுள னேனும் மனமிரங்கிச்
சுந்தரி காத்தரு ளாய்தைய னாயகி சொல்லினனே. 26

( இ - ள் ) அந்து அரிக்கப்பட்ட நெல்லின் - என்பில்லாத அந்து என்னும் பூச்சியினால் ( கொரிக்கப்பட்ட ) தின்னப்பட்ட உள்ளீடில்லாத நெல்லைப்போல, பிணியால் அலக்கண் உற்றேன் - தீராநோயினால் பெரிதும் துன்பினையடைந்தேன். நந்து அரிக்கு தங்கையே ! - பாஞ்சசன்னியம் சங்காயுதத்தினை யுடைய திருமாலினுக்குச் சகோதரியாக உடையவளே ! சுந்தரி - பேரழகுடையவளே ! தையல்நாயகி - தையல்நாயகமாகிய தாயே! உன் திரு புகழ் நா அரும்பா(த) மந்தரின் மந்தம் மிகவுளன் ஏனும் - தேவரீருடைய திருப்புகழை நாவினால் நவின்று ஏத்துதலைப் புரியாத மந்த மதியினரிலும் அறிவின்மை மிகவும் உடையவனாயிருப்பினும். சொல்லினன் - ஏழையேன் விண்ணப்பித்துள்ளேன். மனம் இரங்கி காத்தருள்வாய் - திரு வுள்ளம் இரங்கிக் காத்தருள் புரிவாயாக எ - று.

( கு - ரை ) அந்து, நெல் முதலிய தானியங்களை யுள்ளீடு இல்லாமல் அரிக்கும் பூச்சி. நந்து - சங்கு. நா அரும்பல் - நாவினால் இடையீடில்லாமல் நவிலுதல். மந்தர் - அறிவு இன்மை யோடு சுறுசுறுப்பு இல்லாதவர். இரங்கல் - இளகுதல். சுந்தரம் - அழகு. எ - று.

சொல்லுவ னந்தரி யாமளை சுந்தரி சூலி யென்றே
யல்லும் பகலும் அணுவுநின் சிந்தையி லார்வமிலாய் !
வெல்லுவ தெங்ஙனந் தாயே ! யெனைப்பிணி வெவ்வினையைக்
கல்லுங் கரைந்திடு மேதைய னாயகி காப்பிலையே. 27

( இ - ள் ) அந்தரி யாமளை சுந்தரி சூலி தையல்நாயகி தாயே ! - என்று ஏ. அல்லும் பகலும் சொல்லுவன் - எனப் பலபடியாகக் கூறி இராப்போதும் பகற்போதும் இடையீடில்லா மல் துதிப்பேன். நின் சிந்தையில் அணுவும் ஆர்வம் இல்லாய் -

தேவரீருடைய திருவுள்ளத்தின்கண் சிறிதளவுகூட அன்பு இல்லை. என்னை பிணி வெவ்வினையை எங்ஙனம் வெல்லுவது - அடியவனைப்பற்றியுள்ள கொடிய வினைகளை எப்படிப் போக்குவது, கல்லும் கரைந்திடும் ஏ - கரையாத கருங்கல்லும் அடியவன் கதறுவதைக் கேட்டு கரைந்து போகுமே அவ்வாறிருப்ப காப்பு இல்லை ஏ - யாதும் காவல்கிடையாதே. யாது செய்குவன்.

(கு - ரை) அந்தரி - ஆகாயவாணி (கார்ப்பதி) யாமளை - பச்சை நிறமுடையவள். சூலி - சூலாயுத முடையவள். ஆர்வம் - அன்பு. பிணித்தல் - கட்டுதல். அணு - பரமாணு.

இலைக்கலந் தன்னிற் கசக்குங் கறியன மிட்டலின்று
தலைக்கணை யின்றித் தரையிற் றுயிலினுந் தாழ்விலைகாண்
அலைக்கும் வினையொழித் தானந்த மாக்குவள் அங்கையினைத்
தலைக்கணிந் தேத்துந் தயிலம்மை யீகுவள் தண்ணருளே. 28

(இ - ள்) இலை கலம் தன்னில் - உலகீர் (மக்காள் நீவீர்) இலையாகிய உணவுப் பாத்திரத்தில். கசக்கும் கறி அன்னம் இட்டு அயின்று - கசப்புடன் கூறிய கறிகளையும் சோற்றையும் படைத்து உண்டு. தலைக்கு அணை இன்றி தரையில் துயிலினும் - தலையினுக்கு அணையில்லாமல் வெறுந் (தரையில்) பூமியின்கண் படுத்து உறங்கினுலும். தாழ்வு இல்லை - இழிவு கிடையாது. அகம் கையினை தலைக்கு அணிந்து ஏத்தும் - கைகளைச் சிரமேற் குவித்துப் பணிந்து துதித்தலைப் புரியுங்கள். தண் அருள் ஈகுவள் தயிலம்மை - தையல் நாயகியார் மனமிரங்கி குளிர்ந்த திருவருள் கொடுத்தருளுவள். அலைக்கும் வினை ஒழித்து ஆனந்தம் ஆக்குவர் - பிறவிக் கடலில் அழுத்தியலைத்து வருத்தும் பழவினைகளைப் போக்கிப் பேரானந்தத்தில் அழுந்திடச் செய்குவள். காண் - அசைநிலை.

(கு - ரை) அலைத்தல் - ஒருபாற்படாது அசைத்தல். ஒழித்தல் - வேரறக் களைதல். தலைக்கு அணிதல் - கரவு இன்றி அழகு பொருந்தச் சிரசின்மேற் குவித்துக் கும்பிடல். அணை - ஆசனம். ஏத்தும் - முன்னிலைப்பன்மையில் வந்தது.

அரும்பாவி வஞ்சகன் ஆருச் சினத்தன் அடியவரை
விரும்பாத கன்மனத் தன்புல்லன் காமுகன் மேதையிலாப்
பெரும்பாவி யாயினும் விட்டிடல் காணிற் பெருமையின்றல்
அரும்பா நகையணங் கேதைய லுயகி யண்டினனே. 29

(இ - ள்) அரும்பு ஆம் நகை அணங்கு தையல் நாயகி ஏ - முல்லையரும்பினையொத்த (வெள்ளிய கூரிய பற்களை) சிறு

சிரிப்பினை யுடைய தெய்வமாகிய தையல்நாயகியாரே! அண்டினன் - தேவரீரையே பற்றுக்கோடாகப் பற்றியுள்ளேன். அரும் பாவி வஞ்சகன் ஆரு(த) சினத்தன் அடியவரை விரும்பாத கல் மனத்தன் புல்லன் காமுகன் மேதை இல்லா பெரும்பாவி - கொடிய பொல்லாத பாவச்செயல் புரிபவனும், கபடத்தையுடையவனும், தணியப்பெருத கோபமுடையவனும், சிவனடியார்களைப் பெரிதும் விரும்பிப் பற்றிடாத கருங்கல் நெஞ்சினனும், இழிகுண முடையவனும், காமுகனும், அறிவு என்னும் உள்ளீடில்லாத பெரும்பாவியும். ஆயினும் - ஆகியவனுனாலும் (எளியனேனை). விட்டிடல் காணில் - கைவிட்டிடல் செய்தருளின். பெருமை இன்று (ஆல்) தேவரீருக்குப் பெருந்தகைமையாகாது. (எ - று).

(கு - ரை) அரும்பாவி - யாருஞ் செய்யத் துணியாத கொடிய பாவவினையைப் புரிந்தவன். பெரும்பாவி - முற்பிறப்பில் கல்வியறிவினுக்கு என்று நல்வினை யீட்டாமையால் இப் பிறப்பின்கண் அறிவு என்னும் செல்வங் கைகூடப்பெருத பாவச் செயல் இயற்கையாவுடையவன். மேதை - அறிவு. காமுகன் - தனக்குரிமையில்லாத பிறர்க்குரிய பெண்களைக் கூடிச் சுகிக்கக் கருதுமவன். அண்டிடல் - நெருங்கியிருத்தல்.

அண்டர் முனிவ ரகிலத் தவர்மற் றியாவருமே
மண்டலை நஞ்சை யடக்கிலை யேலுயிர் மன்னுவரோ!
தொண்டன் றுயர்தனை நீக்க லரிதல் தோடமில்லை
பண்டரு மின்சொற் கிளிதைய லுயகி பாரெனையே. 30

(இ - ள்) அண்டர் முனிவர் அகிலத்தவர் மற்றுயாவரும் ஏ - தேவரும் இருடிகளும் எல்லா வுலகினரும் பிரமன் விட்டுணு முதலானவரும் ஆகிய அனைவரும், பண்தரும் இன்சொல் கிளி தையல்நாயகி. பண் போலும் இனிய கொஞ்சு மொழி கூறும் கிளியாகிய தையல்நாயகி யம்மையே! மண்டு அலை நஞ்சை அடக்கிலையேல் - நெருங்கிய அலைகளையுடைய பாற்கடலில் உண்டாகிய ஆலகாலவிடத்தினை இறைவன்றன் கண்டத்தினைக் கறுக்குமாச்செய்து ஆற்றலை யொடுக்கியருளாதிருந்தால், (அவர்கள்தம்) உயிர் மன்னுவர் ஓ - உயிர்களோடு நிலைபெற்று வாழ்வார்களோ வாழமாட்டார்கள். ஆகவே, தொண்டன் - அடியவனின். துயர்தனை நீக்கல் அரிது ஆ - துன்பினை யொழித்திடல் அருமையுடைத்தாமோ? ஆகாது. அங்ஙனம் நீக்கியருளின் தோடம் இல்லை - குற்றமுடைத்தாகாது. பார் என்னையே - அடியேனைத் திருக்கண் பார்த்தருளிச் செய்வீராக. (எ - று).

(கு - ரை) தோடம் - குற்றம் (வடமொழித் திரிவு). மண்டுதல் - நெருங்கல். அலை - கடல் (ஆகுபெயர்). மன்னுதல் -

நிலைபெறல். ஓகாரம் வினாப் பொருளில் வந்தது. அரிது - அருமையுடைத்து.

பாரதி செல்வி யிருவரு மேநிதம் பட்சமுடன்
வாரிதி சூழ்வையத் தார்க்குத் துணைசெய வைத்தவளே!
பேரதி காரியென் றுள்ளக் குறிப்பையும் பேணியருள்
நாரது கொண்டுநின் சீர்தொடுப் பேன்றைய னாயகியே. 31

(இ - ள்) பாரதி செல்வி இருவரும் ஏ - கலைமகளும் திருமகளும் ஆகிய இரு பெருமாட்டிகளும். நிதம் - நாடோறும். பட்சமுடன் - அன்புடன் (தயவுடன்). வாரிசூழ் வையத்தார்க்கு - கடலாற் சூழப்பட்ட இம் மண்ணுலகத்தவருக்கு. துணை செய்ய வைத்தவள் ஏ - பற்றுக்கோடு ஆக இருந்து அவ்விருவர்தம் அருளாகிய கல்வியுடைமையையும் பொருளுடைமையையும் கொடுத்துக் காவல் புரியுமாறு ஆணையிட்டருளியுள்ளவளே! தையல்நாயகியம்மையே! நாரது கொண்டு நின் சீர் தொடுப்பேன் - அன்பாகிய பூநாரினைக்கொண்டு நின் புகழ் தொடுப்பேன். நின் கீர்த்தியாகிய மலரினை மாலையாகத் தொடை செய்வேன். பேர் அதிகாரி - எல்லாக் கடவுளரையும் ஆட்சி புரியும் பராசத்தியே! என் உள்ளம் குறிப்பையும் பேணி அருள் - எளியேனுடைய மன எண்ணக் குறிப்பினையும் நன்கு மதித்து திருவருள் புரிந்திடுவீராக. எ - று

(கு - ரை) வாரிநிதி வாரிதியெனவாயது. (வாரி - நீர்) கடல். பாரதி - கலைமகள். நார் - அன்பு. பட்சம் - கருணை.

நாயகி பஞ்ச தசாட்சரி யம்பிகை நாரணியே!
தாயகி லாண்டம் புரப்பவளே !தைய னாயகியே!
தூயகி ளிமொழி யாயென் றனுதினந் தோத்தரிப்பேன்
ஏயகி ளரொளி யாயுன் றிருவரு ளெய்திலனே. 32

(இ - ள்) நாயகி யென்றும் பதினைந்துமறை (மந்திரம்). எழுத்துருவானவள் என்றும், அம்பிகை யென்றும், நாராயணி யென்றும் பரவிய எல்லா வுலகங்கட்கும் தாயாகிக் காப்பவள் என்றும், குற்றமற்ற கொஞ்சிப்பேசும் கிளிமொழியினையுடையவள் என்றும், தையல்நாயகியம்மையார் என்றும் நாள்தோறும் (விடாமல்) நின்பரியாயப் பெயர்களைக் கூறித் துதி செய்குவன். பொருந்திய ஞானவொளிமயமானவளே! உன் திருவருள் எய்திலன் ஏ - தேவரீருடைய திருவருட் பெருக்கினை இனிதினமும் அடைந்தேன் இல்லையே (விரைந்தருள்புரிக). எ - று.

(கு - ரை) பஞ்சதச அட்சரி என்பதற்குத் திருமூலர் திருமந்திரத்திற் பொருள்காண்க. தாவிய என்பது தாய் எனவாயது. புரப்பவள் - காப்பவள். கிளர் ஒளி - பிரகாசிக்கின்ற ஞான வொளி.

(தொடரும்)

# 'அமுதிற்குத் தமிழென்று பேர்'

வித்துவான். திருமதி. ப. நீலா

பைந்தமிழ் பாடிய பரஞ்சோதியார் :-

செந்நெல் வயல் சிவஞான சுவாமிகளின் சிந்தனையை ஒரு விதத்திலும் — பரஞ்சோதி முனிவரின் பற்றற்ற மனத்தை மற்ருெரு விதத்திலும் பற்றிநிற்கிறது. பரஞ்சோதியார் தரும் செய்தியை இனிக் காணலாம்.

புரையற உணர்ந்தோர் நூலின் பொருளினுள் அடங்கியந்நூல்
வரையறை கருத்துமான வளர்கரு புறம்பு தோன்றிக்
கரையமை கல்விசாலாக் கவிஞர்போல் இறுமாந் தந்நூல்
உரையென விரிந்து கற்பின் மகளிர்போல் ஓசிந்ததன்றே.

அறிவுசால் அறிஞரின் நூலுள் பொருள் மிக ஆழத்தில் இருக்கும். அதுபோல நெல் மணியும் உள்ளடங்கி நின்றது. நூலின் கருத்து சற்றே விளக்கமுறல்போல கருவும் சிறிது புறம்பே தோன்றியது. விளங்கிய நூலறிவு இல்லாத கீழ் மக்கள் தலைநிமிர்ந்து நிற்குமாப்போலே கருத்திட்பம் உருத பயிரும் தலைநிமிர்ந்துநின்று பின் நூலின் பல்வேறு உரை யெனப் பரந்து விரிந்தன கதிர்கள் — என்பது அச்சொல் ஓவியம். இவ்வோவியத்தின் சிகரமாம் ஈற்றடியில் அப்பயிர்கள் கற்புடைய மங்கைபோல தலைதாழ்ந்து அசைகின்றன என்கிருர் புலவர்.

கற்புடைய பெண்டிர் நலம் போற்றி வழிபடற்கும் உரிய தல்லவா ! அனுமன் ஸ்ரீ இராமனிடம் கூறும்போது :-

விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீர் இலங்கை வெற்பில்
நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன் அல்லேன்
இற்பிறப் பென்ப தொன்றும் இரும்பொறை என்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்.

என்கிருன். கற்பெனும் திண்மை அமையப்பெற்ற மங்கை நல்லார் போல — பயிரும் கதிர்களைச் சுமந்து தலைதாழ்ந்தது என்னும் இணைப்பு எத்துணை உயர்ந்தது !

பின்னும் பரஞ்சோதியார் பத்தி என்ற விதை விதைத்து அன்பு என்ற நீர் பாய்ச்சும் அடியார்க்கு ஈசனருள் எப்படிச் செழித்து விளையுமோ அப்படிப் பயிர்கள் விளைந்தன என்றும் கூறுவார்.

அன்புறு பத்திவித்தி ஆர்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்கு
இன்புறு வானஈசன் இன்னருள் விளையுமா போல்.

என்ற சிந்தனை பக்தி உள்ளத்தில்தானே விளையும்!

**வந்தனைக்குரிய சிந்தாமணி:-**

அடுத்து திருத்தக்கதேவர் தீட்டும் காட்சி யொன்றும் உண்டு.

பச்சைப் பாம்பின் சூல் வெளியில் சற்றே விளங்குவதுபோல கருக்கொண்ட பயிரும் மெல்ல வளர்ந்தது. அற்பனுக்கு ஆக்கம் வந்தால் அரையிருளில் குடைபிடிப்பான் என்னும் மொழி போலப் பயிரும் மேலலார் செல்வம் பெற்ற ஞான்று நிற்பது போல் தலைநிறுவிநின்று, பின்பு கல்வி சேர் மாந்தரை ஒப்ப இறைஞ்சிக் காய்த்தது.

சொல்லரும் சூர்ப்பசும் பாம்பின் தோற்றம் போல்
மெல்லவே கருவிருந்து ஈன்று மேலலார்
செல்வமே போல் தலைநிறுவித் தேர்ந்தநூல்
கல்விசேர் மாந்தரின் இறைஞ்சிக் காய்த்தவே.

(சிந்தாமணி)

**பிறநாட்டு நல்லறிஞர் ஒருவர் ;-**

கொன்ஸ்தந்தீன் ஜோஸப் பெஸ்கி (Constantine Joseph Beshi) என்கிற வீரமாமுனிவர் யாத்தது தேம்பாவணி என்ற அழகிய நூல். அதிலே பயிர்கள்,

பூரியார் திருப் போல்தலை பசியகூழ் நிறுவி
நீரி னூர்தலை நேரநேர் வளைவொடு பழுத்த
ஆர மானுநெல் அறுத்தரி கொண்டுபோய் அங்கட்
போரி தாமெனக் களித்தனர் போர்பல புனைவார்.

வீரமாமுனிவர் இப் பாடலின் முன்னடியைச் சீர்பெற்ற சிந்தாமணியிலிருந்தும் — பின்னடியைப் பார்போற்றும் பெரிய புராணத்திலிருந்தும் கொண்டார் என்ருல் தவறென்றுமில்லை.

காரணம் கம்பர், சேக்கிழார், திருத்தக்கதேவர் ஆகியோரைப் பின்பற்றியே தமது செய்யுள் நடையையும் — கருத்தையும் அமைத்துக் கொண்டார் வீரமாமுனிவர்.

**நாவலர் போற்றும் நல்ல தமிழ்ப்புலவர் சேக்கிழார் :-**

பக்திச் செல்வமே செல்வம் என்று கொண்ட அடியார்கள் தத்தமிலே கூடியபொழுது எப்படித் தலைதாழ்ந்து வணங்குவார்களோ அப்படிப் பயிர்களின் தலையும் தாழ்ந்திருந்ததாம்.

பத்தியின் பாலராகிப் பரமனுக் காளாம் அன்பர்
தத்தமில் கூடினார்கள் தலையினால் வணங்கு மாபோல்
மொய்த்த நீள்பத்தி யின்பால் முதிர்தலை வணங்கிமற்றை
வித்தகர் தன்மைபோல விளைந்தன சாலி எல்லாம்.

நெஞ்சே நீ நினையாய் — கண்காள் காண்மின்களோ — செவிகாள் கேண்மின்களோ — மூக்கே நீ முரலாய் — வாயே வாழ்த்து கண்டாய் — கைகாள் கூப்பித் தொழீர் என்று ஐம் பொறிகளையும் அரனிடத்தில் ஆட்படுத்தும் அடித்தொண்டர்கள் நிலையை எத்துணை அழகாக உண்ணும் உணவிலே வைத்து நினைக்க வைக்கிறார் சேக்கிழார்.

உண்ணும் உணவிலும் உடுக்கும் கூறையிலும் ஒளிமிகுந்த இறைவனையே கண்டு வாழ்ந்தனர் தமிழர் என்பதற்கு இவை மட்டுமல்ல, இன்னும் எத்துணையோ காட்சிகள் உண்டு.

( விரியும் )

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam
### Sri Sattanathaswami Devasthanam, Shiyali.

கழுமலம் வளம் நகர் கண்டு சட்டநாதன் அரும் தரிசனமும், தோணிபுரத்தீசன் அருட்காட்சியும். பிரும்மபுரீசுவரரின் பேரின்பமருளும் கருணைக்காட்சியும், திருஞானசம்பந்தருக்கு ஞானப்பால் அருளிய அம்மனின் அருட்பிரசாதமும், ஞானசம்பந்த மூர்த்திகளின் திருக்கோயிலும் கண்டு வணங்கும் பேறு இன்று எம் குடும்பமே பெற்றோம். ஆதீனகர்த்தரின் இறை வழிபாடு மேற்பார்வையின்கீழ் சிறப்பாக இக்கோயிலின் பணிகளும் சுற்றுப்புறங்களும் அமைந்ததுபோல் எங்கும் அமையப் பெறும் நாளென்றோ ?

(Sd.) T. V. Vasudevan,
Collector South Arcot.

# தேவர் தீந்தமிழ்

*வித்துவான், திரு. சொ. முத்தையன் B. A.,*

இலக்கியங்கள் நம் உள்ளத்து என்றும் குன்ரு இன்பத்தைத் தந்து நிற்பன. தமிழ் இலக்கியங்கள் நவில்தொறும் நூல் நயம் பயந்து நிற்கின்றன. நம் இலக்கியங்கள் தமிழ் வளர்ப்ப தோடு சமயக் கருத்துக்களைப் பரப்புவனவாய் இருக்கின்றன.

எனவேதான் சில இலக்கியங்கள் காலங்கடந்து நின்ற போதிலும் சில அவ்வாறுஇன்றிக் காலப்போக்கில் மறைந்து போகும் அளவுக்கு வருவனவாயின. எடுத்துக்காட்டாக மணி மேகலையினைக் காண்போமாயின் தலைசிறந்த தமிழ்க்காப்பிய மாயினும் மக்களது அன்ருடக் கருத்துக்களைக் காட்டிலும் புத்த மதக் கருத்துக்களைப் பரப்புவதையே நோக்கமாகக் கொண்ட மையின் இன்றைய நிலையில் அதனைப் படித்தின்புறுவோர் தொகை அருகிவரலாகிறது. நிலைத்த இலக்கியமாய்த் திகழத் தடைபெறுகிறது.

அந்நிலையிலேயே திருத்தக்கதேவர் இயற்றிய சிந்தாமணி யும் உள்ளது. ஆயின் சிலம்பு மக்களால் நுகரும் அளவினுக்கு இவ்விலக்கியங்கள் சமுதாயத்து உணரப்படுவதில்லை. பிற் காலத்து வந்த அருண்மொழித்தேவராம் சேக்கிழார் அருளிய பெரியபுராணமானது பலராலும் பெரிதும் விரும்பிக் கற்கப் படுகிறது.

கற்பனை நலம் வாய்க்கப்பெற்ற இவை சிறந்தனவே. ஒருவர் கற்பனைக்கு மற்றவர் கற்பனை தாழ்ந்ததாகுமோ! நாட்டுப் பற்று மிக்க புலவர்கள் நாட்டுவளத்தினை நினையுங்கால் அவர்கள் உள்ளம் சிந்தனைச் சிறகடித்துச் செந்தமிழ்த்தேனைப் பருகப் பறவையெனப் பறக்கிறது.

நாடெனப்படுவது நாடா வளத்தைத்தந்து நீர்வளமும் நிலவளமும் சிறந்திருக்க வேண்டும். தக்க நாட்டின் அழகைத் தேவர் காண்கின்ற விதத்தைக்காண்க. அடுதேறலும் பூவி லிருந்து சிந்தும் மதுவும் பொற்குடங்களில் நிரம்பியுளவாம்

அதனை உண்டு இன்னிசை எழுப்புவனவாம் வண்டுகள். அவ்வண்டொலி இடையறாது இசைக்கும் அழகிய நாடாம் வளமிக்க பழனங்கள் நிரம்பியுள்ளதக்க நாடு. அதனழகைக் காண்க என்கின்ற திறத்தை ஓர்க.

"ஆங்க வெல்லை யிகந்தடு தேறலும்
பூங்கட் பொற்குட முந்நிறைத் தீண்டிய
ஏங்கு கம்பலத் தின்னிசை சூழ்வயற்
றூங்கு சீர்த்தக்க நாட்டணி காண்டியே"

இப்பாடலில் மதுவின் மிகுதியும், பழனவளமும் கூறவே நீர் வளம், நிலவளம் ஆகியன சிறந்தனவென இறப்பப் புகழ் கின்றார் தேவர். தனித்தமிழ் இன்பமொன்றினையே நல்கு மிப் பாடலைக் காண்க.

ஆயின் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டக் கவியாத்த அருண்மொழித்தேவராம் சேக்கிழார்பெருமான் கற்பனை கலந்த நிலையிலும் பக்தி யுணர்வோடு புனையுந்திறன் ஒருமாற்று அதிக மாகவே நம்மவரால் விரும்பப்படுகிறது.

கண்ணப்ப நாயனார் பிறந்தருளிய அழகிய பொத்தப்பி நாட்டு வளத்தினைக்கூற வருகின்ற அவர்வாய்மொழியினைக் காண்க. கண்ணப்பர் தோன்றினமையின் கண்ணப்பர் திரு நாடாம். அத்திருநாடு திரிபுராந்தகரான செம்மேனிப்பெம்மான் அருள்பெற்றது; திரிபுரத்தவர்களைச் செகுப்பினும் விடையேறி அருள்செய்ய வல்லவர்; அதுமட்டுமா! ஆன்ற தவநெறியினை வேதவாய்மைக் காவலராய் இருந்து அருள் செய்பவராம் ஆனபயமைந்தும் தீர்த்து அறங்காக்கவல்லவனும் திருக்காளத்தி ஈசன். எனவே அத்தகு இறைவன் எழுந்தருளிய நாடு "நாவலர் புகழ்ந்து போற்றும் நல்வளம் பெருகிநின்ற பூவலர் வாவி சோலை சூழ்ந்த பொத்தப்பிநாடு" என்கின்றார்.

"மேவலர் புரங்கள் செற்ற விடையவர் வேதவாய்மைக்
காவலர் திருக்காளத்திக் கண்ணப்பர் திரு நாடென்பர்
நாவலர் புகழ்ந்து போற்றும் நல்வளம் பெருகி கின்ற
பூவலர் வாவிசோலை சூழ்ந்த பொத்தப்பி நாடு"

மிக்க பூக்களும், வாவிகளும், சோலைகளும் நிரம்பிய எனவே நீர்வளம், நிலவளம் ஆகியவை ஈண்டுச் சிந்தனைச் சிற்பியாம் சேக்கிழார்பெருமானால் நினைவு கூரப்படுகின்றன. 'எத்தொழில் புரியினும், ஏதவத்தைப்படினும் முத்தர் மனம் மோனத்திலே'

என்பதற்கேற்ப நாட்டுப்பற்றுடன் நாட்டுவளம் பாட வருகின்ற இவ்விடத்தும் திரிபுராந்தகனின் திருந்திய நினைவே இனிக்க இனிக்க புலவராம் அருள்மொழித்தேவர் உள்ளத்து வருகின்றது.

எனவேதான் தனித்தமிழ் இன்பம் ஒன்றையே கருதும் பாடலினும், தெய்வ மணத்தோடு முனைவன்கண்ட முந்து தமிழ்ப் பாடல்கள் நலஞ்சிறக்க வல்லனவாயின. இத்தகு பாடல்களே இன்றைய சமய நிலையில்கூட ஏத்தப்படுபனவாயுள. திருத்தக்கதேவர் தரும் தீந்தமிழ் இன்பத்தினும் அருண்மொழித் தேவர் தருகின்ற தெய்வமணம் நிரம்பிய பைந்தமிழ் அமுது நம் மாண்புறு நற்றமிழ்ப் புலவர்களால் பெரிதும் ஏத்தப்படுகின்றது. தெய்வமணம் வீசுதலாலேயே அது பூசனைக்குரிய தெய்வீக நூலாகக் காணப்படுகின்றது. பக்தர்கட்குப் பக்தி நூலாகவும், கற்பனையாளருக்குச் சிறந்த கற்பனைக் கருவூலமாகவும், புலமைகருதும் பேராசான்மார்களுக்குப் பைந்தமிழ்க் காப்பியமாகவும் சிறந்து விளங்கி வருகின்ற இத்தகு நூலினைத் தக்க முறையில் நம் வழியினர் ஓர்ந்து இன்புறுவார்களாக.

# சிறுபாணாற்றுப்படையில் - நல்லியக்கோடன்

திரு. மு. வை. அரவிந்தன், எம். ஓ. எல்.

பத்துப் பாட்டில் மூன்ருவதாக இடம்பெற்றுள்ள சிறுபாணாற்றுப் படையின் பாட்டுடைத் தலைவன் நல்லியக் கோடன். அப் பாடலின் ஆசிரியராகிய இடைக்கழி நாட்டு நல்லூர் நத்தத்தனுர், அவனது குலப்பெருமை, தோற்றப்பொலிவு, கொடைச்சிறப்பு, வீரம் - ஆகியவற்றைப் பல இடங்களில் கூறியுள்ளார்.

நல்லியக்கோடனின் முன்னோர் மாவிலங்கை நகரில் இருந்து ஆண்டனர். அவர்கள் ஓவியர் குடியைச் சேர்ந்தவர்கள். நல்லியக்கோடன் அக்குடியில் தோன்றிப் புகழோடும், வீரத்தோடும் விளங்கினுன்.

நன்மா இலங்கை மன்ன ருள்ளும்
மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்
உறு புலித் துப்பின் ஓவியர் பெருமகன் (120-122)

என்று அவனை நத்தத்தனுர் அறிமுகப்படுத்துகின்ருர்.

அவன் தோற்றப்பொலிவு பல இடங்களில் கூறப்பட்டுள்ளன. அரும்பும், தளிரும் விரவிக்கட்டிய மாலையைப் பூண்டு அவன் அழகாக விளங்கினுன் (161, 267). அவன் கைகள் நீளமானவை (124). அவன் கால்களில் யானையைச் செலுத்தியதால் உண்டான தழும்புகள் இருந்தன; வீரக்கழல்கள் விளங்கின (123).

அவனிடம் எல்லோரையும் மகிழ்விக்கும் நற்பண்புகள் பல இருந்தன. அதனுல் அவன் பெரும் புகழோடு விளங்கினுன் (126, 266). பாரி முதலிய வள்ளல்கள் எழுவரும் இறந்தபின், நல்லியக்கோடன் அவ் வள்ளல்கள் மேற்கொண்டிருந்த ஈகையைத் தான் ஒருவனே மேற்கொண்டு இரவலரைப் புரந்து வந்தான் (112-115).

அவன் வாழ்ந்த அரண்மனையின் வாயில் பொருநர்க்கும் புலவர்க்கும், அந்தணர்க்கும் எப்போதும் திறந்திருந்தது (204-6). அரண்மனையின் உள்ளே எளிதில் சென்று காணு மாறு, இனியவர் பலர் நடுவில் அவன் வீற்றிருந்தான்.(219-20)

அறிவுமிக்க பெரியோர், நல்லியக்கோடனிடம் செய்ந்நன்றி அறிதல், சிற்றினம் இன்மை, இன்முகம் உடைமை, இனியன் ஆதல்-ஆகிய பண்புகள் இருக்கக் கண்டு புகழ்ந்தனர் (207-9). வாள் வீரர்கள் அம் மன்னனிடம், ஆண்மைப் பண்புகள் நிறைந்திருந்ததைக் கண்டு பாராட்டினர். தன் வீரத்தைக் கண்டு அஞ்சி வந்து தன் அடி பணிந்தார்க்கு அருள் செய்தல், கடுஞ்சினம் இல்லாமை, போர்க்களத்தில் அணிவகுத்து நிற்கும் தன் வீரர்களோடு சேர்ந்து போரிடுதல், போரில், பகைவர்க்கு ஆற்றாது அழிந்து பின் வாங்கும் தன் படையைத் தாங்கி நிற்றல்- ஆகிய வீரப் பண்புகளை நல்லியக்கோடனிடம் கண்டு வீரர்கள் போற்றினர் (210-212). எண்ணியதை முடித்தல், மற்றவர் களால் விரும்பப்படுதல், தன்னை விருப்பியவர் வயப்படாமை, தன்னுல் அன்பு செய்யப்பட்டவர் நெஞ்சத்தில் நிகழ்வதை உணர்தல் - ஆகிய பண்புகள் அவனிடம் இருந்ததாய்க் கூறி மகளிர் புகழ்ந்தனர் (213-215). பரிசில் பெற வந்தவரைக் கவரும் இனிய இயல்புகள் அவனிடம் இருந்தன. கலையறிவு குறைந்த திறமையற்ற கலைஞர் முன் அறியாமை மேற்கொண்டு இருத்தல், அறிவுமிக்க சான்ருேர் முன் பேரறிஞுய் விளங்குதல், பரிசிலரின் தகுதி அறிதல், தனக்கென எதனையும் வைத்துக் கொள்ளாமல் பிறர்க்குக் கொடுத்தல்-ஆகிய பண்புகளை நல்லி யக்கோடனிடம் கண்ட பரிசிலர் அவனைப்போற்றினர் (216-218)). மேலும் பாணர், ''சான்ருேர்க்குக் குவித்த கைகளை உடையவன், வீரர் எறிவதற்குத் திறந்துவைத்த மார்பை உடையவன், குடிமக்களுக்கு நிழல் செய்யும் கோலை உடையவன், பகைவர்க்குத் துன்பம் செய்யும் வேலை உடையவன்'' என்று அவனைப் பாராட்டிப் பாடினர் (231-234).

சிறந்த ஆண்மையும் ஊக்கமும் உடையவரே பிறர் துன் பத்தைக்கண்டு இரங்கிப் பொருள் தந்து வள்ளலாக விளங்க முடியும்.

> உள்ளம் இலாதவர் எய்தார், உலகத்து
> வள்ளியம் என்னும் செருக்கு (598)

என்பது திருவள்ளுவர் வாக்கு. நல்லியக்கோடனின் படைத் தலைவர், பகைவர்களை வென்று ஓட்டி, அவர்களின் அரணைத்

தகர்த்து, அவ்விடங்களில் பெற்ற பொருளைப் பாணர்க்கு வழங்கினர்; பின்னர்க் கிடைத்த பெருஞ்செல்வத்தைக் கொண்டு வந்து நல்லியக்கோடனிடம் தந்தனர். அச்செல்வத்தை அவன் தனக்கென வைத்துக்கொள்ளாமல், தன்னை நாடிப் பாடி வந்த பாணர்க்கே தந்துவிட்டான் (246-249). வீரமும், ஈரமும் இணை பிரியாதவை என்பதை நல்லியக்கோடன் வாயிலாக உணர்த்துகின்றார் நத்தத்தனார்.

விருந்தோம்பும் பண்பும் நல்லியக்கோடனிடம் சிறப்பாக அமைந்திருந்தது. பாணர்கள், தமக்கு அவ் வள்ளல் விருந்தளித்த சிறப்பை,

> விளங்குபொற் கலத்தில் விரும்புவன பேணி
> ஆறு விருப்பின் தான்நின்று ஊட்டி (244-5)

என்று கூறியுள்ளார். "உயர்ந்த கலங்களில் சிறந்த உணவு தந்தான்; விரும்பி உண்ணும் பொருளை அறிந்து பேணினான்; குறையாத விருப்பத்தோடு இருந்தான்; தானே இருந்து உண்பித்தான்" - என்று பாணர்கள், நல்லியக்கோடனின் விருந்தோம்பும் பண்பைப் போற்றினர்.

இத்தனை நற்பண்புகளுக்கும் உறைவிடமான நல்லியக்கோடன் இலக்கிய உலகத்தில் என்றும் வாழ்ந்துகொண்டே இருப்பான். அவனது பண்புகள் சிறுபாணாற்றுப்படையைக் கற்குந்தோறும் மணம் வீசிக்கொண்டே இருக்கும். காலந்தோறும் மக்கள் நெஞ்சத்தில் அவன் வாழ்ந்துகொண்டே இருப்பான்.

# சிவஞான முனிவரின் : : : : : இலக்கணக் கொள்கைகள்

செஞ்சொற்கொண்டல். வித்துவான்,
**திரு. சொ. சிங்காரவேலன்** M. A., Dip. Ling.
மொழியியல்துறை, அண்ணுமலைப் பல்கலைக் கழகம்

**1.0 :-** கி. பி. 18-ம் நூற்ருண்டின் பிற்பகுதியில் வாய்ந்த சிவஞான முனிவர் தமிழ் உரையாசிரியராகவும், நூலாசிரியராகவும், அருளாசிரியராகவும் விளங்கிய சான்ருேர் ஆவர். நன்னூலுக்கு உரை வகுத்தவர்களில் சிறப்பிடம் பெறும் செம்மலாரும் இவர். மயிலைநாதரும் சங்கர நமச்சிவாயரும் நன்னூலுக்குத் தாமே புத்துரை வகுத்தனர்; முனிவர் நன்னூல் சங்கர நமச்சிவாயர் உரையினைத் திருத்தி, இடையிடையே தம்முடைய இலக்கணக் கொள்கைகளை விளக்கியுள்ளனர்; 'மாதவ'ச் சிறப்புடைய இவ்வடிகளாருடைய இவ்வுரை 'புத்தம் புத்துரை' என்னும் பெயரும் இதனல் எய்துவதாயிற்று, இவ்வடிகளுடைய ஏனைய இலக்கண நூல்கள்: தொல்காப்பியச் சூத்திர விருத்தி (பாயிரத்திற்கும் முதற் சூத்திரத்திற்கும் எழுதப்பட்டது) இலக்கண விளக்கச் சூருவளி (வைத்தியநாத தேசிகர் எழுதிய இலக்கண விளக்கத்திற்கு மறுப்பு) ஆகியவை. இவற்றிலிருந்து காணப்பெறும் இம்முனிவருடைய சில இலக்கணக் கொள்கைகளை எடுத்து விளக்குவதே இங்கு நம் சிந்தனையாகும்.

## எழுத்து

**1.1,** எழுத்துப்பற்றிய முனிவர் கருத்துக்கள், முதலில் ஆராயத்தக்கன. தமிழ் எழுத்துக்கட்கு இலக்கணம் இன்னது எனக் கூறவந்த நன்னூலார் 'அணுத்திரள் ஒலி எழுத்து' என்றனர்.[1] முனிவர் 'அநாதி காரணமாகிய மாயையினை ஈண்டுக் கூருது, ஆதி காரணமாகிய செவிப்புலனும் அணுத்திரளை எழுத்திற்கு முதற் காரணம் என்ருர்' என்றெழுதும் பகுதி நோக்கத்தக்கது.[2] சைவ சித்தாந்தக் கருத்துப் பவணந்தி

[1] நன்னூல் - நூற்பா - 58.

[2] ,, ,, சிவஞானமுனிவர் உரை.

யார்க்கு இன்று ஆதலின் 'இவ்வாசிரியர்க்கு மாயை உடம் பாடின்று' என்றும் விளக்குகின்றார். இலக்கண விளக்க நூலார் 'மொழி முதற் காரணமாம் நாத காரிய ஒலி' என்று உரைப்பது சைவ மரபை ஒட்டியதாதலும் இங்கு ஒப்பிட்டுணரத் தக்கதாகும்.

இனி, தமிழ் நெடுங்கணக்கினுள் அகர முதல் னகர விறுவாய்க் கிடக்கை முறையாதற்குக் காரணம் காட்டும் அடிகளுடைய உரைப்பகுதி அவருடைய பரந்த ஆராய்வு உணர்வினையும், நுண்மாண் நுழைபுலத்தையும் விளக்குவது ஆகும். *

## 1. 1. 1. முறைவைப்பு :

குற்றெழுத்திற்குப் பின்னர் நெட்டெழுத்து வைக்கப்பட்டமைக்கு முனிவர் கூறும் கருத்து இக்காலமொழியியலாரில் ஒரு சாரார் கூறும் கருத்துடன் உடன்படுதல் இங்குக் குறிக்கத் தக்கது. முனிவர் மொழிகின்றார் :-

"நெட்டெழுத்தாவது, நீரும் நீரும் சேர்ந்தாற்போலக் குற்றெழுத்திரண்டு ஒத்து நின்று நீண்டிசைப்பதொன்றாகலின் அஃதுணர்ந்து கோடற்குக் குற்றெழுத்துக்களின் பின்னர் நெட்டெழுத்துக்கள் வைக்கப்பட்டன".

(1) வந்த + அன் > வந்தான்

(2) செய் + அ + அன் > செய்யான்

இவ்விரண்டு எடுத்துக் காட்டுக்களில் இரு அகரக்குற்றெழுத்துக்கள் ஒரு நெடில் ஆனமையை இக்கால மொழியியலார் விளக்குவர். உடம்படுமெய் (glide)கள் வழங்கப்பெற்ற பின்னர் வந்த + அன் > வந்தவன் என்ற வடிவமும் வந்தது என்பர்.

சிவஞான முனிவர், 'நீரும் நீரும் சேர்ந்தாற்போல' என்று கூறும் உவமை ஆழம் உடையதாகும். அவ்வாறு கூடிய குறில் எழுத்துக்கள் நெடிலாந்தன்மை எய்தியபின் பிரிப்பப் பிரியா என்பது அச்சான்றோர் கருத்து ஆகும். இதுபற்றிய விரிவான கருத்துக்களை மாபாடியத்தும் கையடத்தும் இரண்டாமணி

---

* நன்னூல் - நூற்பா - 73 - உரை ; தொல்காப்பியச் சூத்திர விருத்தி - ஆறுமுக நாவலர் 5 ஆம் பதிப்பு 24 - 26 பக்கங்கள்.

கத்திற் கண்டுகொள்க'' என்றெழுதி மேற்செல்கின்றனர். குறிலே நெடிலாயிற்றெனில் என்று வேறு பிரித்தது ஏன் என்று தடையைத் தாமேயெழுப்பிக்கொள்ளும் இவர், "மொழிக்காரணமாய் வேறு பொருள் தந்து நிற்றலின் அதுபற்றி வேறு எடுத்து எண்ண''ப்பட்டன என்றும் தெளிவாக்குகின்றார்.[1]

அ + ய் + இ > 'ஐ'

அ + வ் + உ > 'ஔ'

உயிர் எழுத்துக்களின் மயக்கம் ( vowel clustes ) தொல்காப்பியர் காலத்தும் அதற்கு முன்னும் இருந்ததேனும், நம் உரையாசிரியர் காலத்தும் பின்னும் இல்லை என்பதற்கு இது சான்று ஆகும். உடம்படுமெய் விரித்தல் இங்கு இதனால் தேவையாகின்றது. "உயிரோடு உயிர்க்கு மயக்கம் இன்மையின், வரும் உயிர்க்கு உடம்பாக அடுக்கும்மெய் உடம்படுமெய் எனப் பொருள் கொள்ளுதலும் ஒன்று'' என்று வரும் உரைப்பகுதி,[2] உயிர்மயக்கம் இவர்க்கு உடன்பாடன்று என்பதனை விளக்குகின்றது.

கால்டுவெல் தம் ஒப்பியல்நூலில், வடநூலையொட்டித் தமிழில் இச் சந்தியக்கரங்கள் வந்தன எனவும், திராவிட மொழிகள் எதனுள்ளும் இவை வாரா எனவும், வடமொழிச் சொற்களை ஒலிக்குங்கால் இவை வழியே ஒலிக்கப் படுகின்றன என்று கூறும் பகுதி இங்கு ஒப்பிட்டுணர்தற்குரிய பகுதியாகும்.[3]

### 1. 1. 3 சார்பெழுத்துக்கள் :

இனி, சார்பெழுத்துப் ( Secondary sounds or depending sounds ) பற்றிய இவ்வாசிரியர் கருத்தினைக் காண்போம். தொல்காப்பியர் கருத்துப்படிச் சார்பெழுத்துக்கள் தமிழில் மூன்றே.

" எழுத்தெனப்படுப
அகரமுதனகரவிறுவாய்
முப்பஃதென்ப
சார்ந்து வரல்மரபின் மூன்றலங் கடையே ''

---

[1] தொல்காப்பியச் சூத்திர விருத்தி — 24 - 26 பக்கங்கள்.

[2] நன்னூல் - நூற்பா 162 - உரை.

[3] Rev. Dr. Caldwoll - A comparative grammar of the DravidiaE Languages - University of Madras -1961-p 136.

"அவைதாம்,
குற்றியலிகரம் குற்றியலுகரம்
ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோரன்ன"

என்ற நூற்பாக்கள்,[1] சார்பெழுத்துக்கள் மூன்று என்றும்.

## 1. 1. 2, ஐகார ஔகாரங்கள் :

வடநூலிற் கூறப்பெறும் சந்தியக்கரங்களை இவர் 'ஐ'. 'ஔ' என்னும் இரண்டெழுத்துக்களோடு இணைத்துக் கூறும் இயல்பினர் ஆவர். இச் சந்தியக்கரங்கள், இக்கால மொழியிய லின்படி 'diphthongs' எனப் பெயர் பெறுவனவாகும். வட நூலார் ஏ, ஓ, ஐ, ஔ நான்கும் சந்தியக்கரம் என்பர். அதனை யொட்டி முனிவரும் இந்நான்கும் இங்கும் சந்தியக்கரம் என்பர்.[2] ஆனால் தொல்காப்பியர் ஐ. ஔ இரண்டையுமே இரட்டைக் கூட்டொலிகள் என்று குறிப்பர் :

"அகர இகரம் ஐகாரம் ஆகும்"

"அகரத் திம்பர் யகரப் புள்ளியும்
ஐயென் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்."[3]

அவர் கூறுததனை இலேசாற் பெறவைத்து, வடநூற் கொள்கை யினை இங்கு நம் முனிவர் எடுத்துரைக்கின்றனர். நச்சினார்க் கினியர், இளம்பூரணர் ஆகிய உரைகாரர்கள் இது விளங்க எழுதாதது, அவர்க்குச் சேனாவரையர் போன்று பெருகிய வடநூற் புலமை இன்மையே என்று விளக்குவர் முனிவர். சேனாவரையார் மாட்டுப் பெருமதிப்புடையவரேனும் பொருந் தாக் கருத்து வருமிடத்து அவரையும் மறுக்கும் திறம் உடைய வர். கருத்து என்று வரும்பொழுது, யாவரேயாயினும் யாதே யாயினும் அஞ்சாது எண்ணியதை உரைத்தலோ எழுதலோ வேண்டும் என்ற உறுதிப்பாட்டை முனிவருடைய இத்தன்மை நமக்கு விளக்குகின்றது.

---

[1] தொல்காப்பியம் நூற்பா 1, 2.
[2] தொல்காப்பியச் சூத்திர விருத்தி - பக். 27
[3] தொல்காப்பியம் நூற்பா 54, 56.

'வடநூல் உணர்ந்தார்க் கன்றித் தமிழியல்பு விளங்காது என்பது நம் முனிவரது கொள்கை.[1] இது வடநூல் அறிவும் தேவை என்பதை விளக்குமேயன்றி, தமிழ் வடநூல் உணர் வையே அடிபபடையாகக் கொண்டது என்று முடிப்பது ஆகாது; ஆதலின் இக் கூற்றுப்பற்றி முனிவரது கொள்கை பற்றி ஐயுறவு கோடல் பொருந்துவதன்று.

கையடரைது 'நரமடங்கல்' போல் என்ற உவமையை இவர் கையாண்டு ஐகார ஔகாரங்களைப் பின்னும் விளக்கு கின்ருர்.[2] சிவஞான முனிவரது கருத்துப்படி இவை பின் வருமாறு அமைவனவாகும் :-

அவை குற்றியலிகரக் குற்றியலுகர ஆய்தம் ஆகியன என்றும் விளக்குகின்றன. ஆனல் பவணந்தியார் பின்னும் மூன்று வகைகளை அவற்றுடன் கூட்டிச் சார்பெழுத்துக்களின் தொகை யினைப் பத்து ஆக்கினர் :[3]

"உயிர்மெய் ஆய்தம் உயிரளபு ஒற்றளபு
அஃகிய இஉ ஐஔ மஃகான்
தனிநிலை பத்தும் சார்பெழுத்தாகும்"

இச்சார்பெழுத்துக்கள், "தம்மொடு தாம் சார்ந்தும், இடம் சார்ந்தும், இடமும் பற்றுக்கோடும் சார்ந்தும் விகாரத்தால் வருதலின் சார்பெழுத்தாயின" என்பர் மயிலைநாதர்.

தொல்காப்பியர்க்குப் பின்னர்ச் சார்பெழுத்தின் தொகையை நன்னூலார் விரித்துக் கூறியதற்குச் சிவஞான முனிவர் கூறும் காரணம் பின்வருவது ஆகும் :-" இனி, ஆசிரியர் தொல் காப்பியர், செய்கை ஒன்றனையும் நோக்கிச் சார்பெழுத்து மூன்று எனக் கருவி செய்தார் ஆகலின், இவ்வாசிரியர் செய்கையும் செய்யுளியலும் நோக்கிச் சார்பெழுத்துப் பத்து எனக் கருவி செய்தார் என்பதும் உய்த்துணர்க."[4] ஆயினும் இவை கூட்டி யுணர்த்தப் படுதல்பற்றி முனிவர்க்குக் கருத்து மாறுபாடே

---

[1] தொல்காப்பியச் சூத்திர விருத்தி பக். 28.

[2] ,, பக். 27; நன்னூல் நூற்பா 73 உரை.

[3] நன்னூல் - நூற்பா - 60.

[4] ,, ,, ,, சிவஞான முனிவர் உரை.

இதுபற்றிப் பேராசிரியர் பி. எஸ். சுப்பிரமணிய சாத்திரியார் கூறும் கருத்துக்கள் இங்கு அறியத்தக்க சிறப்புடையவை.[3]

ஐகாரம் மொழிமுதற்கட் குறுகாது என்பதும், ஔகாரக் குறுக்கம் என்று ஒன்றில்லை என்பதும் சிவஞான முனிவர் சூத்திர விருத்தியில் ஆய்ந்து வெளிப்படுத்தும் முடிவுகள் ஆகும்.[4]

இலக்கண விளக்கச் சூறாவளியிலும், "ஆசிரியர் தொல்காப்பியனார் சார்பெழுத்து மூன்றே என வரையறுத்திருப்பவும், தாமவரினும் நுண்ணறிவுடையார் போன்று, நன்னூலார் கூறிய சொற்பற்றிச் சில முதலெழுத்துக்களையும் அம் மூன்றனோடும் கூட்டிச் சார்பெழுத்தெனக் கொண்டார்; அது பொருந்தாமை விருத்தியில் விரித்துக் காட்டினும்" என்று தெளிவுற எழுதித் தம்முடைய இசைவின்மையை இனிது விளக்கியிருக்கின்றனர்.[5]

( தொடரும் )

[3] History of grammatical theories
- Dr. P. S. S. Sastri - p. 16.

[4] *தொல்காப்பிய முதற்சூத்திர விருத்தி - பக். 33, 34,*

[5] *இலக்கண விளக்கச் சூறாவளி - பக். 65.*

---

## விசேஷ நாட்கள்

10—8—66 முதல் 10—9—66 முடிய

| | |
|---|---|
| 10—8—66 | வேளூர் கிருத்திகை |
| 14—8—66 | பிரதோஷம் |
| 15—8—66 | சுதந்திர தினம் |
| 16—8—66 | ஆடிஅமாவாசை, தருமையில் கயிலைகண்ட நாள் விழா |
| 25—8—66 | ஆவணிமூலம் - குங்கிலியக்கலய நாயனார் திருநக்ஷத்திரம் |
| 26—8—66 | வரலக்ஷ்மி விரதம் |
| 28—8—66 | பிரதோஷம் |
| 30—8—66 | ஆவணி அவிட்டம் |
| 31—8—66 | காயத்ரீஜபம் |
| 6—9—66 | வேளூர் கிருத்திகை. |

## தருமையாதீன

# வேத சிவாகம பாடசாலை

வேதசிவாகமங்களையும் இவைகளின் பொருளையும் உணர்ந்து சமய சாத்திர அறிவையும் பெற்று அர்ச்சகசச்சிறுவர்கள் விதிவழுவாது ஆலய பூஜைகளைச்செய்யவும் அதனல் உலகம் சுபிக்ஷமடையவும் திருவுளம் கொண்டு தருமையாதீனம் 24 ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முகதேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் 1942 வருடம் மார்ச்சு மாதம் 9உ இந்த வேதசிவாகமபாடசாலையைத் தோற்றுவித்தார்கள்.

தேவாலயங்களில் சிவாகமவிதி உணர்ந்து அரனையர்ச்சிக்கும் பல ஆசிசைவச் சிறுவர்களை ஆசாரியர்களாக்கி நன்மையளித்து வரும் இந்தப் பாடசாலையை வடமொழி தென்மொழிகளையு மிருகண்கள் எனப்போற்றி இப்போது வளர்த்து வருபவர்கள் 25ஆவது குருமுதல்வராக எழுந்தருளி உள்ளவர்களும் இமயம் முதல் குமரிவரை உள்ள பல புண்ணிய க்ஷேத்திரங்களைத் தரிசித்து கைலாயமலைக்குச் சென்று சிவபெருமானை வழிபட்டு வந்தமையால் கயிலைக் குருமணி என்ற அன்வர்த்தமான பெயரால் புகழுடையவர்களாயும் விளங்கும் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் ஆவார்கள்.

இருபத்துநான்கு ஆண்டுகளாக நடைபெற்றுவரும் இந்தப் பாடசாலையில் இன்றைக்கு ஏறத்தாழ 25 ஆதிசைவ மாணவர்கள் இலவச உண்டி உறையுள் முதலியவைகளுடன் ஐத்தாண்டுத் திட்டத்தில் வேதம் சிவாகமம் காவ்யம் நாடகம் இலக்கணம் முதலிய நூற்பயிற்சிபெற்று ''ஆகமப்ரவீண'' என்னும் பட்டம் பெறுவதுடன் சாஹித்யப் புகுமுகத்தேர்வு எழுதத்தகுதி உள்ளவர்களாக ஆக்கப்படுகிறார்கள், போதிய அளவு திருமுறைப் பயிற்சியுமளிக்கப்படுகிறது. மற்றும் மாணவர்கள் ஆதீனத்திலும் ஆதீன தேவஸ்தானங்களிலும் நடைபெறும் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம், மகோற்சவம், உருத்திராபிடேகம், இலக்ஷார்ச்சனை முதலிய நைமித்திக விசேடங்களில் ஆங்காங்குச் சென்று நேர்முகப்பயிற்சியும் பெறுகின்றார்கள்.

இப்பாடசாலையில் மாணவர்களுக்கு ஆரோக்கியம் கெடாம லிருக்க மருத்துவர் ஒருவரும் நியமனம் பெற்றுள்ளார்கள். மாணவர்களின் நடை, உடை, பாவனை முதலியவைகள் கண்காணிக்கப்படுகின்றன என்பது இப்பாடசாலையின் இன்றி யமையாத சிறப்பு.

ஆவணியவிட்டம் தீபாவளி சங்கராந்தி என்ற இவைகளின் போது மாணவர்களுக்கு விடுமுறையளிப்பதுடன் கோடைக்கால விடுமுறையுமளிக்கப்படுகிறது. மற்றும் சுதந்திரதினம், குடியரசு தினம் போன்ற நன்னாட்களில் அத்தியயன விடுமுறை அளிக்கப் படுகிறது. மாணவர்கள் சொல்வன்மைபெற "கலைமகள்கழகம்" என்ற பெயரால் ஒரு கழகமும் மாணவர்களால் நடத்தப் படுகிறது.

ஐந்தாண்டுத் திட்டத்தில் நித்தியநைமித்திக காம்யபூஜை களுக்குரியவைகளான மூலாகமவிதி, அதையனுசரித்து பத்ததி களின் படியுள்ள பூஜாப்ரயோகங்கள். சாஹித்யப் புகுமுக வகுப்புக்குரியதான சம்ஸ்கிருத இலக்கண இலக்கிய பாடங்கள் போதிக்கப்படுகின்றன.

ஆண்டுதோறும், மூன்று தேர்வுகள் நடத்தப்பெறு கின்றன. ஆண்டுத்தேர்வு வெளியூரில் ஆசிரியப் பணிபுரியும் சிவாகம வித்வான் ஒருவரைக்கொண்டு நடத்தப்பெறுகிறது. முதன்மையாகத் தேர்ச்சிபெறும் ஒவ்வொரு வகுப்பு மாணவர் களுக்கும் ஆண்டுதோறும் தருமையில் நடைபெறும் ஆவணி மூலத் திருவிழாவின்போது பரிசு வழங்கப்படுகிறது.

இப்பாடசாலையின் துவக்கம் முதல் 4—9—66 முடிய 24 ஆண்டுகளில் ஆகமப்ரவீண என்று பட்டம்பெற்ற மாணவர்கள் பயின்று தேர்ச்சிபெறுமல் வெளியேறிய மாணவர்கள் உள்பட 120 மாணவர்கள் ஆவார்கள். இப்போது பயின்றுவரும் மாணவர்கள் 25 ஆகவே இப்பாடசாலையின் இப்போது தொடர் புடைய மாணவர்கள் 145 ஆகும்.

மாணவர்கள் எல்லோருக்கும் முக்காலம் உணவு, உறை விடம். பெட்டி, படுக்கை, எண்ணை, சவரம் முதலியவைகளுடன் தீபாவளி முதலிய விசேஷ காலங்களில் ஆடைகளும் இலவச மாக வழங்கப்படுகின்றன.

இந்தப் பாடசாலைக்குத் தலைமை ஆசிரியர் ஒருவரும் துணை ஆசிரியர்கள் இருவரும் இருக்கின்றனர். திருமுறைப் பாடம் ஆதீன ஓதுவாமூர்த்திகளால் நடத்தப்பெறுகிறது.

இந்தப் பாடசாலையில் பயின்று ஆகமப்ரவீண என்ற பட்டத்துடன் சாஹித்ய சிரோமணி பட்டம் பெற்றவர்கள் சிலர். இவர்களில், பலவிடங்களில் ஆசிரியர்களாகப் பணிபுரிபவர்கள் சிலர். மற்றவர்கள் தனது சொந்த ஊரிலேயே தேவஸ்தானத்தில் ஆகம அறிவின் முதிர்ச்சியால் செம்மையான முறையில் தனது பாரம்பர்யமான இறைவனுக்கு முப்பொழுதும் திருமேனி தீண்டும் பணியைச் செய்கின்றார்கள். மற்றும் வேறு சிலரை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுடைய ஆட்சியிலிருக்கும். வேளூர், காழி, கடையூர் முதலிய க்ஷேத்திரங்களில் ஆகமிகர்களாகவும் அர்ச்சகர்களாகவும் நியமிக்கப்பட்டுப் பணியாற்றுகிறார்கள்.

பழநி தேவஸ்தானம் சிவாகமக் கல்லூரியில் தலைமை ஆசிரியராக இருப்பவரும் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் சமஸ்கிருத ஆசிரியராக இருப்பவரும் இந்தப் பாடசாலையில் பயின்ற மாணவர்கள் ஆவார்கள்.

யாழ்ப்பாணத்திலிருந்தும் இங்கு வந்து இருமாணவர்கள் பயிற்சி பெற்றுச்சென்றிருக்கிறார்கள்.

பாரதம் செழிக்க பக்தியுடன் பரமனை அர்ச்சகர்கள் பாங்குடன் அர்ச்சிக்க இப்பாடசாலையை நிறுவிப் பல ஜில்லாக்களிலுமுள்ள ஆதிசைவ அர்ச்சக மாணவர்கள் பயன்பெற உண்டி உறையுள் மருத்துவம் முதலிய எல்லா வசதிகளையும் செய்து கொடுத்துக் கருணையுடன் கைம்மாறுகருதாக் கடவுள் போலும் கல்வித் தந்தையாயுமிருந்து இந்த வேதசிவாகம பாடசாலையைச் சிறப்புற நடத்தி வருகின்ற ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்களுடைய பேராதரவிற்கு என்றென்றும் அர்ச்சக சமூகம் முக்கரணங்களால் நன்றிசெலுத்தும் கடமைப்பாடுடையது.

சிவ

# தருமையாதீனத் தேவாரப்பாடசாலை

உலகிடை உயிர்களின் உய்திகருதி சிவன் அருளால் அவதரித்த மூவர் முதலிகள் அருளியவை தேவாரம் முதலிய பன்னிரு திருமுறைகள். செந்தமிழ்ச்சொக்கன் சீரருள்கொண்டு திகழும் நந்தமிழ் நாட்டிடைத் தோன்றிய நற்றவச் சிறப்புடைய மக்கள்: நாடொறும் நினைவிற்கொண்டு போற்றிப் பயனுறுதற் குரியவை அவை. அவற்றைப் பொருளுணர்ந்து பண்ணிசை யோடும் ஓதும் மரபுணர்ந்து ஓதிப் பயனுறுதல் சாலச் சிறப் புடையது. அம்முறையிற் பயிற்சி அளித்து, சைவப் பேருலகில் திருநெறியத் தெய்வத் தீந்தமிழ்ப் பண்ணிசைப் பணியை வளர்த்திட எழுந்ததே இத்தேவாரப் பாடசாலை.

**தோற்றம் :**

நற்றமிழ்ப் பண்ணிசைப் பாடற்கு வந்து மகிழ்ந்திடுவோன், சிவன். அவனைப் போற்றிடற்குச் சிறப்பாக உரிய தோத்திரங் கள் திருமுறைகள். அவற்றை முறையே கேட்டு ஓதி வழிபட்டு மேலாய பயனை யாவரும் பெறவேண்டித் தருமை ஆதீனம் அருட்சந்தான வழி அருட்குரவராய் வந்து தோன்றிய 24வது குருமகாசந்நிதானம்; ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் 1941-ஆம் வருஷம் மார்ச்சு மாதம் இதனைத் தோற்றுவித்தருளினார்கள்.

**வளர்ச்சி :**

இப்பாடசாலை தோன்றி இருபத்தைந்து ஆண்டுகள் ஆகின்றன இதனைச் சிறந்த முறையில் இன்றுவரை ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் கண்ணேபோற் போற்றி வளர்த்து வருகின்றார்கள். இவர்கள் ஆணைவழி உணவு, உடை, உறைவிடம், மருத்துவம் முதலிய அனைத்தும் இலவசமாகப்பெற்று நன்கு பயிற்சி பெறுகின்றனர் மாணவர்கள். இப்பாடசாலையில் திருமுறைகளைச் சிறந்த முறையில் பண்ணிசை முறைமையோடும் பயிற்சி பெற்றுள்ள மாணவர்கள் 75 பேர். இதுவரை பயிற்சியுற்ற இம்மாணவர் அனைவரும், நற்றமிழ்ப் பண்ணிசைகொண்டு நாளும் தொண்டு புரிந்து கேட்ட அன்பர் சிந்தை நெகிழ்ந்திடப் பணிபுரிந்து வாழ்கின்றனர்.

**வாழ்க குருவருள்.**

# *தெய்வீகப் பேரவை

13—6—66 திங்கட்கிழமை தமிழ்நாட்டின் மடாதிபதிகள் சேர்ந்து தெய்வீகப் பேரவையொன்றை நிறுவினர், மயிலாப்பூர் பி எஸ். ஹைஸ்கூலில் நடைபெற்ற தெய்வீகப் பேரவையில், ஸ்ரீ காஞ்சி காமகோடி சங்கராச்சாரிய சுவாமிகள். தருமபுர ஆதீன கர்த்தர் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள், மதுரை ஆதீனகர்த்தர், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஆதீனகர்த்தர் ஸ்ரீலஸ்ரீ அருள் நந்தி தம்பிரான் சுவாமிகள், குனறக்குடி அடிகளார், முதலியோர் கலந்து மக்களுக்கு நல்வழியைக் காட்டினர்.

இந்து அறநிலைய ஆணையர் ஸ்ரீ எம். எஸ். சாரங்கபாணி முதலியார் யாவரையும் வரவேற்ருர். திரு முதலியார் அவர்கள் தெய்வீகப் பேரவையின் நோக்கம்பற்றிப் பேசும்போது "மக்கள் சமயநெறியிலிருந்து விலகியபோதெல்லாம் திருமடங்கள் அவர்களை நன்னெறிக்குக்கொண்டுவர பாடுபட்டிருக்கின்றன. இப்போது அதேமாதிரி நிலைமை ஏற்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டிலுள்ள மடங்கள் தம்முடைய தனியான சம்பிரதாயங்களை மட்டும் பிரசாரம் செய்வதோடு நின்றுவிடாது இத்துறையில் நம்பிக்கை பெறுவதற்கு வாய்ப்பே இல்லாத மக்களையும் சமயப் பற்றுள்ளவர்களாக்க வேண்டுமென்ருர்" மேலும் அவர் தொடர்ந்து பேசுகையில் "கிராமங்களிலிருந்து ராஜ்யமட்டம் வரையில் சபைகள் அமைத்து இப்பணியை நடத்தவேண்டும் என்று கூறினர். ஒவ்வொரு கிராமத்திலும் வாரவழிபாட்டுக்கு வகை செய்ய வேண்டிய அவசியத்தையும் வற்புறுத்தினர்."

தமிழ் நாட்டின் முதன் மந்திரி திரு. எம். பக்தவத்சலம் அவர்கள், தமது தொடக்கவுரையில் கூறியதாவது "பண்டைக் காலந்தொட்டு மயிலைக்குப் பல சிறப்புக்கள் உண்டு. திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணுக்கிய தலமிது. இங்கே பல அற்புதங்கள் நடந்திருக்கின்றன. இன்றும் ஓர் அற்புதத்தைக்

---

* இலங்கை வானெலியின் 'கண்டதும் கேட்டதும்' செய்திச் சுருள் நிகழ்ச்சியில் 18—6—66 இல் ஒலிபரப்பியது

காண்கிறோம். ஆதீனகர்த்தர்கள் பலர் கூடித் தெய்வீகப் பேரவை அமைத்திருக்கிறார்கள். மக்கள் வாழ்வுக்கு வழிகாட்டி உதவி செய்வதற்காகவே ஆதியில் இம்மடங்கள் அமைக்கப் பட்டன. அந்த லட்சியத்தை நிறைவேற்றுவதற்காக இப்போது அவர்கள் மக்களுக்கு வழிகாட்ட முற்படுகின்றனர் '' என்றார்.

மேலும் முதன்மந்திரி அவர்கள் தொடர்ந்து பேசுகையில் '' இந்தப் பேரவையை, சர்ச்சைகள் வேற்றுமைகளை விட்டு மக்களுக்கு நல்வழிகாட்ட வேண்டுமென்று, பெரியோர்கள் கூடி அமைத்துள்ளார்கள். நோயுற்றோர், ஆதரவற்றோர், அனாதைகள் போன்றவர்களுக்கு உதவ முற்பட்டுள்ளனர். இப் பேரவை சீரிய நோக்கங்களோடு அமைக்கப்பெற்றிருக்கின்றது'' என்று கூறி முடித்தார்.

காஞ்சி ஆசாரிய சுவாமிகள் பேசுகையில் '' இப்போது நம் நாட்டில் எழுநூறு எண்ணூறு வருஷங்களாக, பார்ஸி, கிறிஸ்தவர்கள், முஸ்லீம்கள் போன்றவர்களின் கோயில்களைக் காண்கிறோம். அவைகள் அசுத்தமாயிருப்பதில்லை. நம்கோயில்களில் அசுத்தம்' இருப்பதைக் காண்கின்றோம். நம்கோயில் நம் ஆண்டவன் என்ற உணர்வு இருந்தால் கோயில்கள் சுத்தமடையும்'' மேலும் ஆசாரியசுவாமிகள் தொடர்ந்துபேசுகையில் '' நாம் அரசாங்கத்துக்கும், நகரசபைக்கும் மற்றும் நமக்குதவும் ஸ்தாபனங்களுக்கும் நன்றிக்கடனாக வரியைச் செலுத்துகின்றோம். நமக்கு, நீர். காற்று மற்றும் பலவகை வளங்களைத் தந்தருளும் இறைவனுக்கும் நாம் நன்றிசெலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். அது தான் தெய்வீகக்கடமை. காலை, மாலை மறவாமல் செலுத்த வேண்டிய கடமை '' என்றார்.

இத்தெய்வீகப் பேரவைக்குத் தருமையாதீன கர்த்தர் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார். தருமையாதீனத்தின் கயிலைக் குருமணி ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் தமது தலைமை உரையில் '' வாழ்வுக்கு ஆற்றல், அறிவு, பொருள் வேண்டுமென்று கூறுவதோடு ஆன்ம ஞானமும், அதற்கு ஆசாரியரின் அனுக்கிரகமும் இருந்தால் தான் மனநிறைவு ஏற்படும். பருவத்துக்கு ஏற்ப ஆசைகள் மாறி வருகின்றன'' என்று கூறினார். பின்னர் மகாசந்நிதானம் அவர்கள்

" கனியினும் கட்டிபட்ட கரும்பினும்
பணி மலர்க் குழற் பாவை நல்லாரினும்
தனி முடி கவித்தாளும் அரசினும்
இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே "

என்ற பாடலைக்கூறி, அதன் பொருளையும் விளக்கி வாழ்வு நிறைவு பெறுவதற்குச் சமய உணர்வின் அவசியத்தை வலியுறுத்தினர். சேக்கிழார், மணிவாசகர் போன்றவர்கள் அமைச்சராயிருந்தபோது மக்கள் வாழ்வுக்கு வழிகாட்டினர்கள், என்ருர்.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவராகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருணந்தித் தம்பிரான் சுவாமிகள் " நமச்சிவாய கோடி எழுப்பி எல்லோரையும் சொல்லும்படி செய்தார். நாம் வீட்டுக்கணக்கு எழுதுவதுபோல ஆண்டவன் நம் கணக்கை எழுதிக்கொண்டிருக்கிருன் என்பதை,

" தொழுது தூமலர் தூவித் துதித்து நின்
றழுதுகாமுற்றரற்றுகின்ருரையும்
பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்
எழுதுங்கீழ்க் கணக் கின்னம்ப ரீசனே "

என்ற பாடலைக் கூறி விளக்கிக் காட்டினர்.

மதுரை ஆதீனகர்த்தர், மயிலம் சந்நிதானம், கோயம்புத்தூர் கௌமார மடம் சுவாமிகள், குன்றக்குடி அடிகளார், ஆகியோரும் அறிவுரை ஆற்றினர்கள். பல பேரறிஞர்களும், பிரமுகர்களும் இப்பேரவையின் நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டனர். இத்தெய்வீகப் பேரவை ஓர் சமய மறுமலர்ச்சியை உண்டு பண்ணும் என்பதில் எட்டுணையும் ஐயம் இல்லை.



# செய்திகள்

### தருமையாதீனத்தில்

## *சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை விழா*

25—7—66 திங்கட்கிழமை சைவ சமயாசாரியர்களுள் ஒருவ ராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் குருபூஜை ஸ்ரீ குருஞான சம்பந்தர் திருக்கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. காலையில் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கும், ஏனைய சைவ சமயாசாரியர் களுக்கும் விசேஷ அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன.

மாலையில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் வெள்ளையானை வாகனத் திலும், சேரமான்பெருமாள் நாயனார் வெள்ளைக்குதிரை வாகனத் திலும் எழுந்தருளச் செய்யப்பெற்றுள்ளது ஆதீன ஓதுவா மூர்த்திகளும் ஆதீன தேவஸ்தான ஓதுவா மூர்த்திகளும் தக்க பக்க வாத்தியங்களுடன் திருமுறைப் பாராயணம் நிகழ்த்தினர். ஆதீனப் பல்கலைக் கல்லூரி பொறுப்பு முதல்வர் வித்துவான், திரு. சா. குருசாமி தேசிகர் பேராசிரியர்களான மகாவித்துவான் திரு. சி. அருணைவடிவேல் முதலியார். வித்துவான், திரு. வி. சபேசன். ஆதீனத் தேவாரப் பாடசாலை ஆசிரியர் திரு. ஆர் வேலாயுத ஓதுவாமூர்த்திகள் அற்புத விளக்கம் கூறினார்கள்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் காலை மாலை இருவேளைகளிலும் எழுந்தருளி தரிசித்து பிரசாதம் வழங்கி யருளினார்கள்.

### சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலையச் சார்பில்

## *மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு*

சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலைய மாதாந்திர சமயப் பிரசாரமும், வழிபாடும் நுங்கம் பாக்கம் ஸ்ரீ அகஸ்தீஸ்வரர் ஆலயத்தில் 26—6—66 ஞாயிறு மாலை சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டுக் குழுவினர் சார்பில் சுவாமி, அம்பாளுக்கு அபிஷேக ஆராதனை நிகழ்த்தப்பட்டது.

குழுவினர் தேவார திருவாசகம் ஓதி முறையாக வழிபாடியற்றி னர். பிறகு ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் சமயப் பிரசாரம் நடைபெற்றது. திருநாவலூர் திரு. நா. மாணிக்கம் பிள்ளை, வித்துவான் திருமதி மீனுட்சி சுந்தர சிவை முதலியோர் பாரதப் பண்பாடு பற்றியும், திரு முறைச் சிறப்புப் பற்றியும் அரிய விரிவுரை நிகழ்த்தினர்கள். சுவாமிகள் தமது தலைமையுரையில் நல்லவர்கள் வாழும் ஊரும், நாடும் செழிப்பாக இருக்கும் என்றும், நல்லவர்களாகிய பஞ்ச பாண்டவர்கள் தங்கியிருந்த விராட தேசம் செழிப்பாக இருந்ததே இதற்குப் போதிய சான்ருகும் என்றும், மக்கள் நல்லவர்களாக வேண்டுமானுல் நன்றே உடையனுய்த் தீதே இல்லாதவனுய் உள்ள இறைவனுடைய ஆலயத்திற்கு நாள் தோறும் சென்று வழிபட வேண்டுமென்றும், நல்லவர்களுடன் தொடர்பு கொள்ளவேண்டுமென்றும் குறிப்பிட்டார்கள். திரு. பி. சுவாமிநாதன் திருமுறை ஓதி மகிழ்வித்தார். மேற்படி ஆலய அறங்காவலர் குழுவினரை வரவேற்று வழிபாட்டையும் பிரசாரத்தையும் நன்ருக நடத்திவைத்தார்.

சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப் பிரசார வழிபாடு 31—7—1966 ஞாயிறு மாலை சைதாப்பேட்டை ஸ்ரீ சுந்தரேசர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. வழி பாட்டுக்குழுவினர் சார்பில் சுவாமி, அம்பாளுக்கு அபிஷேக ஆராதனைகள் நடைபெற்றன. சுவாமி, அம்பாள் சந்நிதியில் தேவாரத் திருமுறைகள் ஓதி முறையாக வழிபாடாற்றினர். வழிபாட்டின் பின்னர் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்கள் தலைமையில் சமயப் பிரசாரக் கூட்டம் நடந்தது. ஸ்ரீமத் சோம சுந்தரத் தம்பிரான் சுவாமிகள் பிரசாரத்தைத் தொடங்கி வைத்தார்கள். தொடக்கவுரையில் ஒவ்வொரு பேட்டையிலும் உள்ள வசதியில்லாத கோயில்களை அக்கோயிலைச் சுற்றியுள்ள அன்பர்கள் தூய்மையாகப் பாதுகாக்கவேண்டும் என்றும் கோயில் பூஜைகள் சரியாக நடைபெற்ருல்தான் காலாகாலத்தில் மழை பெய்யும் என்றும் குறிப்பிட்டார்கள். திரு. N. R. முருக வேள், திரு. K. கமலக்கண்ணன், திரு. N. R. ஆடலரசு முதலி யோர் சமயச் சொற்பொழிவு நிகழ்த்தினர். திரு. P. சுவாமி நாதன் தேவாரத் திருமுறை ஓதி மகிழ்வித்தார். அறங்காவல ரும், ஊர்ப்பொதுமக்களும் குழுவினரை வரவேற்று வழிபாட்டை யும், சமயப் பிரசாரத்தையும் சிறப்பாக நடத்தி வைத்தனர்.



# எதிர்காலம் -திரு. கே. முத்துஜோதிடர்

( பராபவஞு ஆவணிமீ 1உ முதல் 31உ முடிய )
( 17—8—66 முதல் 16—9—66 முடிய )

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

*அசுவதி நக்ஷத்திரம் நான்கு பாதங்களும் பரணி முதல் பாதமும் மிச்சிர பலனைத்தரும் ஜீவன விருத்தியும் சஞ்சார பலனும் சற்று ஆரோக்யக்குறைவும் காட்டும். பரணி 2, 3, 4 பாதங்களும் கார்த்திகை முதல் பாதமும் சுபமான பலனைத்தரும். வித்தியாவிருத்தியும், ஜீவன விருத்தியும் கிராமத்தில் ஸஸ்ய தான்யாபிவிருத்திகளும் தரும். குடும்பம் ஓங்கும். சனி, செவ் வாய் சுபமாகும்.*

**2. ரிஷபம். கார்த்திகை ¾ - ரோஹிணி - மிருகசீரிஷம் ½**

*கார்த்திகை 2, 3, 4 பாதங்கள் விசேஷமான லாபத்தைத் தரும். தனதான்ய விருத்தியும் ஜீவன விருத்தியும் ஏற்படச் செய்யும். நூதனமான உத்தியோக முறையில் எதிர்பாராத லாபங்களைத் தரும், ரோஹிணி 4 பாதங்களும் மிருகசீர்ஷம் 1, 2 பாதங்களும் சுபாசுபங்கள் சமமாக நடக்கும். ஆரோக்யக் குறைவும் தொழில் நஷ்டமும் வீண் அலைச்சல்களும் உண்டு பண்ணும். மத்தியில் சில எதிர்பாராத நஷ்டமான பொருள் வந்துசேரும். செவ்வாய், புதன் சுபமாகும்.*

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾**

*மிதுனராசி 9 பாதங்களும் சுபமேயாகும். வம்சவிருத்தி ஏற்படும். ஜீவனம் விருத்தியாகும். ஸஸ்ய தான்யங்கள் விருத்தி யாகும். மேல்பதவிகள் கிடைக்கும். ஆரோக்கியம் உண்டு பண்ணும். புதன், வியாழன் சுபமாகும்.*

**4. கடகம். புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் ஒருபங்கு சுபத்தையும் மூன்று பங்கு அசுபத்தையும் தரும். அதிக விரையமும் சகல காரியங்களிலும் நஷ்டத்தையும் தரும். மேலோர் பெரியோர்களின் வருத்தத்தையும் வீண் அலைச்சல்களையும் உண்டுபண்ணும். ஆரோக்யக் குறைவும் வைத்தியச் செலவும் அதிகமாகும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் ¼**

சிம்மராசி 9 பாதங்களும் இல்லற சுகத்தைத்தரும். இடம் மாறுதலும் உத்தியோக உயர்வும் ஏற்படும். மேலோர் பெரியோர்களின் அன்பும் கிடைக்கும். தெய்வபலம் முன்னின்று காக்கும். ஆரோக்யம் உண்டாகும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**6. கன்னி. உத்திரம் ¾ - ஹஸ்தம் - சித்திரை ½**

கன்னியாராசி 9 பாதங்களும் மிச்சிரமான பலனைத்தரும். குடும்பத்தில் விவாகாதி மங்கள காரியங்கள் நடக்கச்செய்யும்; வரவுக்குமேல் செலவு ஏற்படும். எல்லாக் காரியங்களும் தவக்கத்துடன் நடக்கச்செய்யும். தெய்வபலம் முன்னின்று காக்கும். உலக பிரசித்தியையும் கீர்த்தியையும் உண்டுபண்ணும். சற்று ஆரோக்யக் குறைவு காட்டும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

**7. துலாம். சித்திரை ½, - சுவாதி - விசாகம் ¾.**

துலாராசி 9 பாதங்களும் மிச்சிர பலனைத்தரும். வியாதி நீங்கி ஆரோக்யம் உண்டாகும். தொழில் ஓங்கும். நூதனமான ஜீவன லாபத்தைத்தரும். எதிர்பாராதபடி பெரியோர்களின் அன்பினால் ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் சேரும். வித்தியா விருத்தியாகும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**8. விருச்சிகம். விசாகம் ¼-அனுஷம்-கேட்டை**

விருச்சிகராசி 9 பாதங்களும் சுபமேயாகும். விவாகாதி சுபங்களைத்தரும். ஸ்திர ஜீவனம் உண்டுபண்ணும். புத்திரோத்பத்தி முதலான சந்தோஷத்தையும் வம்ச விருத்தியையும் தரும். கிரகசுகம் ஓங்கும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்.

**9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் ¼**

தனூர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனையே தரும். குடும்பத்தில் மங்களகாரியங்களால் அதிக செலவுகள் ஏற்படும். கிராமாபிவிருத்தி காரியங்களில் தவக்கம் காட்டும். அடிக்கடி வீண் செலவுகளும் வீண் அலைச்சல்களும் உண்டுபண்ணும். குடும்பத்தில் ஒற்றுமைக் குறைவைக்காட்டும். ஞாயிறு, திங்கள் சுபமாகும்,

**10. மகரம். உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½**

மகரராசி 9 பாதங்களும் சுபமாகும். தனதான்ய விருத்தியும் ஜீவன விருத்தியும் தரும். குடும்பத்தில் மங்கள காரியங்கள் நடக்கும். வம்சம் ஓங்கும். மேலோர் பெரியோர்களின் அன்பு கிடைக்கும். ஆரோக்யம் உண்டுபண்ணும். இல்லறசுகம் ஓங்கும். வியாழன், சனி சுபமாகும்.

**11. கும்பம் - அவிட்டம் ½, சதயம் - பூரட்டாதி ¾.**

கும்பராசி 9 பாதங்களும் மிச்சிர பலனைத்தரும். தொழில் நிமித்தம் இடம் மாறச்செய்யும். வரவு செலவு சமனாகும். ஆரோக்யம் உண்டுபண்ணும். குடும்பத் தொல்லைகள் அதிகமாகும். தெய்வபலம் காக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

**12. மீனம். பூரட்டாதி ½ உத்திரட்டாதி - ரேவதி.**

மீனராசி 9 பாதங்களும் சுபத்தைத்தரும். சதா மங்கள காரியங்களும் சம்சார பலனும் ஏற்படும். ஜீவன லாபம் ஏற்படும். மேலோர் பெரியோர்களின் உதவியால் சகல காரியங்களும் சித்தியாகும். வித்தியாவிருத்தி ஏற்படும். தெய்வபலம் பிரகாசிக்கும். குடும்பம் தழைத்தோங்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

## முக்கிய கவனிப்பு

மேற்படி ஆவணிமாதம் முதலில் 6 கிரகங்களும் கடகத்தில் சேர்ந்தபடியால் சஸ்ய விருத்தி தான்ய விருத்தியிலும் எந்த விதமான இடைஞ்சல்களும் ஈதிபாதைகளும் வராமல் இருப்பதின்பொருட்டும், கீழே சென்ற மாதங்களில் மேலோர்களாலும பெரியோர்களாலும் நடத்தி வந்தபடி தெய்வீக காரியங்களையும் பரிகாரங்களையும் நடத்திவர சமஸ்த மங்களமும் உண்டாகும். கடவுள் காப்பார்,

சுபம்